# சிங்கப்பூரில் இருதிங்கள்...

(பயணக் கட்டுரைகள்)



காரைக்குடி

கவிஞர் நாவுக்கரசன்

# சிங்கப்பூரில் இருதிங்கள்

(பயணக்கட்டுரை)

## கவிஞர் நாவுக்கரசன்
## (மா. ஆண்டியப்பன்)



தமிழ்ப்பொன்னி வெளியீடு
“ அன்பகம் ”
44, திருவள்ளுவர் திருநகர்,
2-வது வீதி,
காரைக்குடி - 630 001
தொலைபேசி : 04565 - 233919

**சிங்கப்பூரில் இருதிங்கள்**
**(பயணக்கட்டுரை)**

முதற்பதிப்பு : பிப்ரவரி 2008

விலை : ரூ. 20-00

**Singappooril Iru Thingal**

Navukkarasan
**M. Andiyappan**
Author

First Edition : **February - 2008**

Pages : **64**

Publication : **Thamil Ponni Veliyeedu Anbagam,**
44, Thiruvalluvar Thirunagar,
Secont Street,
Karaikudi - 630 001
Ph : 04565 - 233919

Price : **Rs. 20/-**

விற்பனை உரிமை : **கவிதா பப்ளிகேஷன்**
8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
சென்னை – 600 017
போன் : 044 - 2436 4243

அச்சிட்டோர் : **ஸ்ரீ கோபாலகிருஷ்ணா அச்சகம்**
34, தியாகிகள் தெரு
தேவகோட்டை - 630 302
போன் : 272713

நற்கதை நம்பி
சிறுகதைச் செம்மல்
புதின இலக்கியச் செல்வர்
பேராசிரியர், டாக்டர்
**அய்க்கண்** M.A.,B.T.,D.Lit.,

**பொதுச் செயலாளர்,**
- தமிழ்நாடு வல்லம்பர் சங்கம்
- பாலைய நாட்டு வல்லம்பர் கல்வி அறநிலை
- SPR கல்வி அறநிலை
- காசி வல்லம்பர் சத்திரம்

## அணிந்துரை :

கவிஞர் திலகம் நாவுக்கரசன் எழுதிய பயண நூலினைப் படிக்கும் வாய்ப்புப் பெற்றேன். அண்மையில் அவர் மேற்கொண்ட பயணங்களைப் பற்றி அருமையான குறிப்புகளுடன் சுவைமணக்க எழுதியுள்ளார். தான் பயணம்செய்த புகைவண்டிகள், விமானங்கள் முதலியவற்றின் பெயர், எண் உள்பட, துல்லியமான செய்திகளோடு நம்மையும் பயணத்தில் அழைத்துச் செல்கிறார்.

எத்தனையோ பேர் சென்றுவந்து பாராட்டிய சிங்கப்பூர் பயணம், கவிஞரின் கைவண்ணத்திலும் புதிய அழகு பெற்றுப் பொலிகிறது.

"விமானத்திலிருந்து பூமியைப் பார்த்தேன், எங்கும் நீலக்கடலின் அற்புதத்தோற்றம், அவற்றிற் கிடையில் சின்னஞ்சிறு பசும்சோலைகள், வீடுகள் தெரிந்தன, மேகங்களின் ஊடே விமானம் பறந்தது. கீழ்பரப்பில் மண்மாதாவின் பச்சை ஆடைகள் பரவசமாய் இருந்தது." என்பன போன்ற கவிதை ஓவியங்கள், கட்டுரையின் இடையிடையே பாயசத்தின் ஊடே மிதக்கும் முந்திரிப்பருப்புகள் போல, நம் உள்ளத்திற்கு மகிழ்ச்சியூட்டுகின்றன.

சிவகங்கை மாவட்டத் திருக்குறள் பேரவையின் செயலாளராகத் திகழும் கவிஞர் நாவுக்கரசன் ஆண்டுதோறும் திருக்குறள் ஒப்புவித்தல் போட்டியைத் தொய்வின்றிப் பள்ளிதோறும் நடத்தி வருகின்ற செயல் வீரர், அந்தப் போட்டியில் அமராவதிப்புதூர்ப் பள்ளியில் பரிசுபெற்ற மாரிமுத்து என்பவரை, சிங்கப்பூரில் உயர்ந்த நிலையில் வீற்றிருப்பதைக் காணும்வாய்ப்புப் பெற்ற நாவுக்கரசனது உள்ளம் பெருமையில் பூரித்து நிறைவதில் என்னவியப்பு ?

சிங்கப்பூரின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் ஆணிவேராகத் திகழ்ந்த **லீ குவான் யூ** அவர்களது சாதனைகளைப் பட்டியலிட்டுப் பாராட்டுகிறார் கவிஞர்.

சிங்கப்பூரில் தங்கியிருக்கும்போது இந்தியாவில் தமிழுக்குச் செம்மொழிப் பெருமை கிடைத்த செய்தி நாவுக்கரசருக்கு எத்தகை மகிழ்ச்சியளித்தது என்பதையும் உணர்வு பூர்வமாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

" தொன்மை, இயன்மை, தூய்மை, தாய்மை,
முன்மை, வியன்மை, வாய்மை, மறைமை,
எண்மை, இளமை, இனிமை, தனிமை,
ஒண்மை, இறைமை, அம்மை, செம்மை."

என அடுக்கி மகிழ்கிறார்.

சிங்கப்பூர் போன்ற வெளிநாடுகளில் மட்டுமல்ல, நம் தாய்நாட்டிலேயே இயற்கை எழில் கொஞ்சும் சுற்றுலா தலங்கள் எத்தனையொ இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டும் விதத்தில் நாவுக்கரசரின் கீழைஇந்தியப் பயணம் மேலைஇந்தியப் பயணம் ஆகிய கட்டுரைகள் அமைந்துள்ளன.

ஓரிசாவில் ஒரு வேளைத் தேநீர் வாங்கிக் குடித்ததுமே கவிஞரின் உள்ளத்திலிருந்து துள்ளிக்கொண்டு ஒரு கவிதை வெளிவருவதைக் காண்கிறோம்.

மக்களுமே புதுமையின் மயக்கத்தில் சிக்காமல்
எக்கணமும் ஓரிசாவின் இயல்பினிலே இருப்பவராம்
காய்ச்சிய பசும்பாலில் தேத் தூளைச் சேர்த்துப் பின்
ஒன்றாக்கி ஊற்றுகின்றனர் இரு ரூபாய் வாங்குகிறார்
கனியிலும் இனிமைமிகும் மனிதர்கள் ஏராளம்
இனிய ஓரிசாவில் இருந்திட எண்ணமே

என்று மகிழ்கிறார் கவிஞர் திலகம்.

கோனார்க் சூரியன் கோவில், ஹூக்ளி நதி, கொல்கத்தா, புத்தகயா, வாரணாசி, அலகாபாத், அயோத்தி, ஹரித்துவார், அமிர்தசரஸ் பொற்கோவில், ஜாலியன்வாலா பாக், வாகா எல்லை, தாஜ்மஹால் முதலான இதிகாசப் புண்ணியத் தலங்களையும் வரலாற்றுச் சிறப்புமிக்க களங்களையும் சுவையோடு விவரிக்கிறார் கவிஞர்.

பின்னர் அவர் மேற்கொண்ட மேலை இந்தியப் பயணத்தையும் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

இந்தியாவின் புண்ணியச் சின்னங்கலான 12 ஜோதிர்லிங்கத் தரிசனப் பயணம் அவருக்கு கிடைத்த நல்ல வாய்ப்பு. மும்பையிலிருந்து எலிபெண்டா, எல்லோரா முதலான குகைகளுக்குச் சென்று அங்குள்ள சிலைகளைக் கண்டு ரசித்துப் போற்றியுள்ளார்.

இந்திய நாட்டின் தந்தை காந்தியடிகள் பிறந்த இல்லத்தையும் வல்லபாய்படேல் உருவாக்கிய சோமநாதர் கோயிலையும் சிறப்பாக வர்ணித்து நம் உள்ளங்களில் நினைவுச் சிற்பங்களாகச் செதுக்கிவிடுகிறார்.

பயணக் கட்டுரைகளில் மட்டுமல்ல - புதுக்கோட்டை தேவகோட்டை என்ற தலைப்பில் ஓர் அருமையான வரலாற்றுக் கதையையே படைத்துத் தந்துள்ளார்.

ஒரு வகையில் அதுவும் ஒரு பயணக் கதைதான் : தனி மனிதனின் பயணக் கதை அல்ல- ஒரு சமுதாயத்தின் பயணக் கதை.

கவிஞரின் முன்னோர்களது வரலாற்றை ஆய்வு செய்து அதன் வெளிப்பாடாக ஒரு சுவையான கதையை உருவாக்கியுள்ளார்.

நாடகப்பாங்கு பெரிதும் அமைத்து விறுவிறுப்பான கதையாக அந்த வரலாறு நம் கண் முன்னே நகர்வதை உணர்கிறோம்.

நல்லடைக்கலம் செட்டியாரின் அழகுத் திருமகளின் பூப்புநீராட்டு விழாவின் மகிழ்ச்சியில் திளைத்திருக்கும் நமக்கு திடுக் என்று ஒரு திருப்பத்தை ஏற்படுத்தித் திகைக்க வைத்துவிடுகிறார்.

ஓர் அனுபவம் வாய்ந்த வரலாற்று நாவலாசிரியரின் கைவண்ணத்துடன் செட்டியாரின் மகனது துணிவையும், தியாகத்தையும் நம் முன் சித்திரித்துக் காட்டி, விழிகளில் கண்ணீர் கசியச் செய்துள்ளார் கவிஞர்.

கவிஞர் திலகம் நாவுக்கரசனார் எதிர்காலத்தில் இன்னும் பல படைப்புகளை உருவாக்கித் தமிழ் இலக்கியத்துக்கு அணியும் வளமும் செய்ய வாழ்த்துகிறேன்.



## நாவுக்கரசரின் தூய பணி வெல்க !

**-கயல் தினகரன்**
**தி.மு.க. இலக்கிய அணி**
**மாநிலப் பொருளாளர்**

செட்டிநாட்டு மண்ணுக்கு இயற்கையாகவே தமிழ் மணம் உண்டு. தமிழ் உணர்வு, கலை உணர்வு, அளவோடுகூடிய ஆன்மீக உணர்வு கொடைக்குணம் யாவும் குருதியில் கலந்தது. சிந்தனைக்கும் இணையாக கல்வி அறிவு கை வரப்பெறாத ஆச்சியர்கள் குக்கிராமக் குலவிளக்குகளிடம் இலக்கியத் தென்றல் தவழக்கூடிய கவிநய உணர்வு வியக்கத்தக்க வகையில் உண்டு. அத்தகைய செட்டிநாட்டு மண்ணில் வித்தாகி விளைந்து பூத்து "திரு" உடைப் பேராளராக விளங்கி வருபவர்தான் அருமை நண்பர் கவிஞர் நாவுக்கரசனார்.

தொடக்கப்பள்ளித் திருத்தலம் காலம்தொட்டு இன்று வரை 50 ஆண்டுகளாக மலைத்தேன் போன்று குறையறா நட்புக் குன்றாம் அவர்.

கவிஞர் கண்ணதாசன் அவர்களால் தமிழகத்துக்கு அறிமுகம் ஆனவர் கவிஞர் நாவுக்கரசர். ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த தென்றல் எனும் இலக்கிய கிழமை இதழில் வெண்பாப் போட்டியில் பூக்காமற்போகுமோ பூ எனும் ஈற்றடிக்கு வெண்பா எழுதி முதல் பரிசு பெற்று வெற்றித் திருமகனாக தமிழகத்துக்கு அறிமுகமானவர். கவிநயச் சுடர் ஒளிரும் அந்த நான்கு வரி வெண்பா இது.

வையம் இகழ்ந்தாலும் வால்பிடிப்போர் தம்தொழிலைச்
செய்ய மறப்பதுண்டோ சேல்விழியே - மொய்குழலார்
நோக்காமற் போனாலும் நோகாத கற்றாழை
பூக்காமற் போகுமோ பூ !

கோகினூர் வைரம் போன்று கோலோச்சும் இவ்வெண்பா மூலம் முடி சூட்டிக்கொண்டவர் கவிஞர் நாவுக்கரசர். இவரது கவிதைகளில் தனித் தமிழ் உணர்வும், இனமான உணர்வும் இழையோடும்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் சுனாமியாய் எழுந்து வரலாற்று முத்திரைபதித்த தேவகோட்டை நகரில் 5-9-1935 ஆம் ஆண்டு பிறந்தவர். கல்லூரிக் கல்வியைத் தொட்டவர். கலை நயத்தோடு, கம்பன் கவிநயமும் கமழும் காரைக்குடி மாநகரில் தொலைபேசித் துறையில் ஆய்வாளராகப் பணிபுரிந்த ஆற்றலாளர். திருக்குறள் வகுப்புகள் நடத்தி வள்ளுவத்தை இளஞ்சிறார்கள் மனதில் பதித்துவரும் பண்பாளர்.

திராவிட இயக்க உணர்வுகளை கவசமாகக் கொண்டவர். நினைவில் வாழும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் அணுக்கத் தொண்டர். அடிகளாரின் அடியொற்றி நடக்கும் இன்றைய தவத்திரு பொன்னம்பல அடிகளாரின் அன்பால் திளைப்பவர்.

தமிழினத் தலைவர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களின் உடன்பிறப்பாய்ச் செயல்படுபவரை உயிரினும்மேலாய்க் கருதுபவர்.

1960ல் சுசிலா எனும் இன்முகத்தரசியுடன் இல்லறம் கண்டார். 17 ஆண்டுகள் பவித்திர வாழ்க்கை முடித்து இயற்கை எய்தினார் சுசிலா எனும் சுகந்த மலர்.

பொன்னி, கலையரசி எனும் பெண் மகவுகளும், மாதவ மாயாண்டி, திருவள்ளுவன், அன்புவெங்கடாசலம் ஆகிய ஆண் மக்களும் உள்ளனர். சுசிலா, அன்னம், ஆதித்யமணிகண்டன், கௌதமன், முகிலன் எனும் பெயரப் பிள்ளைகளின் அன்பில் நனைந்து வருகிற கவிஞர் நாவுக்கரசர் எழுபத்து இரண்டு வயது இளைஞர்.

தமிழ்த் தொண்டு செய்து தமிழோடு கரைவதையே தன் லட்சியமாகக் கொண்ட கவிஞர் நாவுக்கரசரின் தொண்டு வளர்க! தூயபணி வெல்க! வாழ்வாங்கு வாழ்க! என வாழ்த்துகிறேன்.



## பொருளடக்கம் :



## காணிக்கை

**முன்னை முதன் மொழியே! மூத்த தமிழ்த்தாயே!**
**அன்னைத் திருநாடே! அன்பிறையே - சின்னவனைப்**
**பெற்றெடுத்துப் பைந்தமிழைப் பேசப் பயிற்றுவித்த**
**நற்றாயே! தாள்பணிவேன் நான்.**

பத்து வயதில் தந்தையைப் பறிகொடுத்த என்னைக் காத்து, வளர்த்து, ஆளாக்கி, மகிழ்ந்த என்தாய்க்கு இந்நூல் காணிக்கை.

*—நாவுக்கரசன் (மா. ஆண்டியப்பன்)*

# சிங்கப்பூரில் இரு திங்கள்

அழகு மிகுந்த நகரம் சிங்கப்பூர். அதனைக் காண நீங்கள் அவசியம் வரவேண்டுமென்று அழைத்தான் என் மகன் திருவள்ளுவன். நானும் கட்டாயம் வருவதாகச் சொல்லி அதற்கேற்ற ஆயத்த வேலைகளில் ஈடுபட்டேன்.

சிங்கப்பூர் செல்ல பாஸ்போர்ட் தயாராயிற்று. அதன்பிறகு சிங்கப்பூருக்கு யார் யார் செல்வது என்று உறுதியாயிற்று. என்னுடன் மருமகள் லெட்சுமி, பேரன் கௌதமன் ஆகியோர் வர இசைவு தெரிவித்தனர்.

அந்நாள் வேகமாக நெருங்கியது. அதன்படி சென்னை பயணமானேன். விரைவு ரயிலில் (55/8) பயணச்சீட்டு எடுத்து நலமுடன் வந்து சேர்ந்தேன்.

என் சிறிய மகன் அன்பு வேங்கடாசலம் எழும்பூருக்கு வந்திருந்து என்னை நலமுடன் அழைத்துச் சென்றான். அன்பு வேங்கடாசலம் வீட்டில் எல்லாமே மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருந்தனர். அன்பு மகன் முகிலன் எனக்குச் சிரிப்பு விருந்து ஊட்டினான்.

எனக்கு வேண்டிய மருந்துகள் சிலவற்றை வாங்கி வந்தான் அன்பு. பேரன்கள் சசி செந்தில் இருவரும் அன்புடன் உபசரித்தனர். இரவு நெடுநேரம் உரையாடலில் கழிந்தது.

மறுநாள் மருமகள் லெட்சுமி பேரன் கௌதமன், தெய்வானை, மாணிக்கம், கார்த்திக் ஆகியோர் வந்து கலந்து கொண்டனர். பகல்விருந்து அருமையாக நடந்தது.

இரவு சிங்கப்பூர் பயணம் எல்லோரும் ஆயத்தமாகிக் கொண்டிருந்தோம். மருமகள் லெட்சுமி, பேரன் கௌதமன் என்னுடன் விமான நிலையம் வந்தனர். விமான நிலையத்தில் சாமான்கள் பரிசோதனைக்குப் பிறகு மூவரும் விமானம் நின்ற பகுதிக்குச் சென்று விமானத்தினுள் அவரவர் இருக்கையில் அமர்ந்தோம். நண்பர்கள், உறவினர்கள் வழியனுப்பி வைத்தனர்.

நள்ளிரவு 12.50 மணிக்கு எங்களைத் தாங்கிய ஏர் இந்தியா விமானம் (IC, 555) சிங்கப்பூரை நோக்கிப் புறப்பட்டது. விமானத்தினுள்ளே எங்களை நல்ல முறையில் கவனித்துக் கொண்டனர். சிற்றுண்டியும் பானங்களும் விருப்பத்திற்கேற்ப வழங்கினர். எல்லாம் அருமையாக இருந்தது. அதிகாலையில் விமானம் சிங்கப்பூரை நெருங்கியது.

பொழுது புலரும் காட்சி. வானத்தில் சின்னஞ்சிறு மேகங்கள் ஊர்வலமாகச் சென்று கொண்டிருந்தன. விமானத்திலிருந்து பூமியைப் பார்த்தேன். எங்கும் நீலக்கடலின் அற்புதத் தோற்றம். அவற்றிற்கிடையில் சின்னஞ்சிறு பசும்சோலைகள், வீடுகள் தெரிந்தன. மேகங்களின் ஊடே விமானம் பறந்தது. கீழ்பரப்பில் மண் மாதாவின் பச்சை ஆடைகள். பரவசமாய் இருந்தது.

காலை 7-15 மணிக்கு சிங்கப்பூர் விமான நிலையம் வந்தடைந்தோம். எத்தனை விமானம் எங்கு பார்த்தாலும் அக்காட்சிகள். பலமொழி தெரிந்தவர்கள், பல்வேறு நாட்டினர் இப்படி அழகு மனிதர்களின் அணிவகுப்பு. அவற்றிற்கிடையில் என்மகன் திருவள்ளுவன் வந்திருந்து எல்லோரையும் வரவேற்றான். அவனது காரில் அனைவரும் ஏறிக்கொண்டோம். திருவள்ளுவன் காரை ஓட்டினான். அனைவரும் திருவள்ளுவனின் இல்லம் சென்றோம். அது ஒரு அடுக்கு மாடிக் கட்டிடம். (#07-331) அந்த இல்லத்தில் எல்லோரும் தங்கினோம். திருவள்ளுவனின் வீட்டுக்கு அடையாளம் அடுக்கு எண் 102 வரிசை எண் 7 வீட்டு எண் 331.

நல்ல ஓய்வுக்குப்பின் அனைவருக்கும் நல்ல முறையில் காலைக் காப்பி மருமகள் லெட்சுமி வழங்கினார். எனக்கு பாகற்காய்ச் சாறு பருகக் கொடுத்தனர்.

மாலையில் சிங்கப்பூர் ஊரைச் சுற்றிப் பார்க்க காரில் புறப்பட்டுச் சென்றோம். தோபோவா என்ற பகுதியிலிருந்து எங்கள் கார் பயணம் செய்து முதலில் அம்மன் கோவில் தரிசனம் செய்தோம். அம்மன் கோயில் வீரப்ப பண்டாரத்தைச் சந்தித்தோம். காரைக்குடி செக்காலைப் பகுதியைச் சேர்ந்த அவர் நல்ல முறையில் உபசரித்து கோயிலைச் சுற்றிக் காட்டினார். கோவிலில் திருவள்ளுவன் லெட்சுமி கௌதமன் மனோகரன் நாகையா ஆகியோருடன் எனது வருகைச் சிறப்பாக இருந்தது நல்ல வழிபாடு செய்தோம்.

இருபத்தேழு கோயில்களுக்கு மேல் சிங்கப்பூரில் உள்ள கோவில்கள் அனைத்தும் சிங்கப்பூர் அரசுக்குச் சொந்தமானது. கோயில்கள் ஒவ்வொன்றும் தனித்தனி அலங்காரம் கொண்டவை. எங்கு நோக்கிலும் அமைதியும் அழகும் என்னைக் கவர்ந்தன. உலகிலேயே சிங்கப்பூர் நாட்டில் தான் ஒழுங்கு காண முடியும். உலகப்புகழ் கொண்ட நகரம். என் உள்ளம் கவர்ந்த அழகுநகரம்; **(Discipline)** என்றால் என்ன என்பது சிங்கப்பூரில் பார்த்தால்தான் உலக மக்களுக்குப் புரியும்.

கோயில் பிரசாதம் வழங்கினர். அருமையாக இருந்தது. பிரசாதத்தைத் தனித் தனி வாளிகளில் வைத்திருந்தனர். பக்கத்தில் சின்னஞ்சிறு இலைபோன்ற பேப்பர் துண்டுகள். அவற்றில் பதார்த்தங்களை எல்லாம் நாமேதான் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். அருமையான ஏற்பாடு. சுவையாக இருந்தது.

கோவிலில் இருந்து புறப்பட்டு வீடு நோக்கிக் கார் பயணம் ஆனது. லோரங்கு-I என்ற பகுதியில் தே போயா என்ற உட்பகுதிக்கு அந்தகார் **GR**-1993 என்ற எண்ணுடன் திருவள்ளுவன் கார் ஓட்டத்தில் பாய்ந்து சென்றது. எல்லோரும் வீடு திரும்பினோம்.

மறுநாள் பொழுது விடிந்தது. சிங்கப்பூரின் புனிதமான காற்று எங்கள் உடலைத் தழுவியது. காலையில் கார் புறப்பட்டு லோரங்கு பகுதிக்குச் சென்று திரும்பியது. சுற்றிலும் அடுக்கு மாளிகைகள் கொண்ட நகரம். சிறுவீடு காண்பது அரிதாக இருந்தது. சுற்றிலும் அடுக்கு

97 அடுக்கு 9913 99-C என்ற மாளிகை வானளாவ எழும்பி இருந்தன. அடுக்கு 91 முதல் அடுக்கு 98 வரையிலும் அழகாக இருந்தன.

பின்னர் காலைச் சிற்றுண்டிக்கு பின்னர் எங்கள் தனிநடை இயல்பாக இருந்தது. பிராடெல் சாலை சுற்றிப் பார்த்தேன். நகரின் மையப்பகுதிக்குச் சென்று பார்த்தேன். எங்கும் கண்கொள்ளா காட்சிகள்.

பகல் உணவுக்குப் பின்னர் சற்று ஓய்வு எடுத்துக் கொண்டு மறுபடியும் தனியாக நடந்து சுற்றிப் பார்த்தேன். அடுக்கு 93, அடுக்கு 94, அடுக்கு 95, அடுக்கு 92 என்ற வகையில் பல்வேறு மாடமாளிகைகள் சுற்றிலும் இருப்பதைப் பார்த்துப் பரவசமானேன். எங்கு நோக்கிலும் எழிற் காட்சிகள். எல்லாமே என் உள்ளம் கவர்ந்தன. வண்ண வண்ணத் தோற்றங்கள். என் எண்ணம் இனித்தது.

மறுநாள் உதயமானது. காலைச் சிற்றுண்டி முடித்துக் கொண்டு மகன் திருவள்ளுவன் தன் அலுவலகத்துச் சென்றான். என் தனிமையை மறக்க நான் லோரங் 4 என்ற பகுதிக்குச் சென்றேன். அங்கு அடுக்கு 93 ஐப் பார்த்தேன். அது ஒரு சந்தை மற்றும் மளிகைக் கடைகள் நிறைந்த இடம். அங்கு ஒவ்வொரு இடமாகச் சென்று சுற்றிப்பார்த்தேன். அது சிறிய இடமாக இருந்தாலும் வணிகம் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டு இருந்தது.

மாலையில் முக்கியமான பகுதிகளுக்கு என்னை என் மகன் அழைத்துச் சென்றான். அது அவன் வேலைபார்க்கும் இடத்தின் மொத்த வணிகமாகத் திகழ்ந்து கொண்டிருந்தது. அந்த மன்றத்திற்குச் செல்லும் வழியில் காரை இடம் பார்த்து நிறுத்த சுற்றிச்சுற்றிப் பார்த்து ஒரு இடத்தைத் தேர்வு செய்து காரை அங்கு நிறுத்திவிட்டு இருவரும் அந்த மன்றத்தைக் காணச் சென்றோம்.

அம்மன்றம் மிக அழகாக அலங்கரிக்கப்பட்டு இருந்தது. முக்கிய விருந்தாளிகளை பிரமுகர் வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றனர். என் மகன் ஒரு கிளையின் தலைமைப் பொறுப்பில் இருந்த நிர்வாகி என்பதால் மிகுந்த மகிழ்ச்சியுடன் என்னை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றனர்.

சிங்கப்பூர் மாரியாட் (Marriott) என்ற அந்த மாமன்றத்தின் உள்ளே பலரும் குழுமியிருந்தனர். அப்பொழுது அங்கு வருகைதந்த அவ்வணிக அமைப்பின் முக்கிய விருந்தாளி (CEO) முக்கியமான மேலாள் முதலான பெருமக்கள் உள்ளே வரத் தொடங்கினார்கள். என் மகன் திருவள்ளுவனுக்கு உயர்ந்த பரிசுகள் தரப்பட்டன. அவனை அவன் முன்னாள் நண்பரும், அவ்வணிக அமைப்பின் மற்றொரு தலைமை பொறுப்பில் இருந்த இலக்குவன் என்ற நண்பர் அறிமுகம் ஆனார். நான்கு மணி நேரம் நடந்த அந்த நிறுவனத்தின் ஆண்டுப் பெருவிழா மிகக் கோலாகலமாக நிகழ்ந்தது. இறுதியில் அனைவரிடம் விடைபெற்று என்னை என் மகன் காரில் வீட்டுக்கு அழைத்து வந்தான். அனைவரும் உறங்கச் சென்றோம்.

பொழுது விடிந்தது. மறுநாள் புலர்ந்தது. அன்று தமிழ்ப் புத்தாண்டுத் திருநாள். திருநாளில் எனக்கு வாங்கி வந்த என் புதுச்சட்டையை அணிந்தேன். உற்சாகமாக இருந்தது.

மாலையில் பங்காருவிடக் காளியம்மன் கோயிலுக்கு காரில் அழைத்துச் சென்றான். அக்கோயில் காளியம்மன் அங்காளம்மன் மதுரை வீரன் பெரிய நாச்சாள் அம்மன் முதலான தெய்வங்களை வணங்கினோம். ஐயப்பன் குருவாயூரப்பன் முதலான தெய்வங்களை கும்பிட்டோம். புத்தாண்டை ஒட்டி கோவிலின் உள்ளே அலங்காரங்கள் மிக அதிகமாக இருந்தன. கூட்டமும் அதிகமாக இருந்தது. கோவிலில் யாகம் வளர்த்து அந்தக் கூட்டத்தில் அனைவரும் வணங்கினோம்.

இரவு இன்பமாக இருந்தது. எல்லோரும் உணவு உண்டு அமைதியாக உறங்கினோம்.

மறுநாள் காலை சுற்றுலாச் சென்றோம். எங்கு நோக்கினும் இனிய தோற்றம் பரவசக் காட்சிகள். சிங்கப்பூரின் இதயமான பகுதி. இன்று நேரம் போவதே தெரியவில்லை. பார்க்கும் திசை எல்லாம் பரவசக் காட்சிகள் உள்ளத்தை மயக்கின. அழகிய சிங்கப்பூரில் எழில்மிகு காட்சிகளை மாலையில் கண்டோம். பூமிக்குக் கீழ்த்தடத்தில் உல்லாசப் பயணம் நிகழ்ந்தது. தலைக்கு மேலே நீரில் வாழும் எல்லா உயிரினங்களும் உலா வந்தன. அக்காட்சி பரவசமாயிருந்தது.

அப்பொழுது சிங்கப்பூரில் ரங்கூன் வீதி செரங்கான் வீதி மோல்மேன் வீதி என்ற பிரம்மாண்டமான பகுதியைக் கடந்து எங்கள் கார் மாரியம்மன் கோவிலைச் சென்றடைந்தது.

மாரியம்மன் கோவில் பிரம்மாண்டமான கோயில் யாகம் நிறைய நடந்தது. பூஜைகள் கூட்டம் மிக அதிகம். பிள்ளையார் கோவில் தனியே இருந்தது. அதனையும் வணங்கினோம்.

தமிழர்கள் அதிகமாக வாழும் சைனா நகரம் பகுதிக்குச் சென்றோம். மிக இன்பமாக இருந்தது. மளிகைச் சாமான்கள், காய்கறிச் சந்தை நம்ம ஊர் மளிகை என்ற இடங்கள் எல்லாம் கண்ணுக்கு விருந்தாக இருந்தன. நிறையக் காய்கனிகள் வாங்கினோம். எல்லாவற்றையும் எங்களையும் ஏற்றிக் கொண்டு கார் வேகமாக வீடு திரும்பியது.

மறுநாள் காலை எனது சுற்றுலா இருந்தது. தனியாகப் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தேன். எத்தனை மொழிகள். எத்தனை இனங்கள்.

மாலையில் எனது பழைய உறவினர் வீட்டுக்குச் சென்றோம். இராமசாமி என்ற அந்த நண்பர் விருந்து பரிமாறினார். அவர் மகள் அருண்மொழியின் அமுதமொழிகள் இனித்தன. அங்கிருந்து புறப்பட்டு காரில் கடற்கரை சென்றோம். என் தம்பி மகன் நாகையா உடன் வந்து எங்களுடன் கலந்து கொண்டான். கடற்கரையில் கடலில்

இறங்கி எனது பேரன் கௌதமனுடன் விளையாடி மகிழ்ச்சியில் ஆழ்ந்தோம்.

இரவில் மகன் திருவள்ளுவனுடன் சற்றுத் தொலைவில் இருந்த 'சுங்கைகாலுட்' சிவன் கோவிலுக்குச் சென்றோம். அது ஒரு மிகப் பிரம்மாண்டமான கோவில். அங்கே தமிழகத்திலிருந்து வருகை தந்த டாக்டர் தமிழண்ணல் என்ற பேராசிரியர் உரையாற்றினார். என்னைக் கண்டதும் பேச்சுக்கிடையில் என்று வருகையைப் பற்றிப் பிரமாதமாகப் பேசினார். கவிஞர் கண்ணதாசனின் நெருங்கிய நண்பர் என்று என்னை அறிமுகம் செய்து வைத்தார். பெருமக்கள் என்னை அழைத்து மேடையில் அமர வைத்தனர். உடன் அருண் செங்குட்டுவன் என்ற சிங்கப்பூர் நண்பர் என்னை உபசரித்தார். அன்று தமிழகத்திலிருந்து சென்ற எனக்கு சிங்கப்பூர் மண் சிறந்த நினைவுப்பரிசினை வழங்கியது.

அருண் செங்குட்டுவனின் அறிமுகம் எனக்குக் கிடைத்தது. அவரும் தமிழண்ணலும் எனக்கு நல்ல இனிப்புகளை வழங்கினர். 'சுங்கைகாலுட்' சிவன் கோவில் வணங்கிவிட்டு இல்லம் திரும்பினோம்.

இரவு இனிமையாகக் கழிந்தது. மறுநாள் காலை நான் தனியே எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்தேன். மாலையில் நாகையா கலையரசி இராமசுவாமிக்கு பலகாரம் செய்து கொடுத்தோம்.

அங்கிருந்து என் 8 கண்டோன்மெண்ட் குழுவின் விலாசம் விசாரித்து நீண்டதூரம் சென்று அங்கு இல்லம் சேர்ந்தோம். அங்கே மிக ஆவலுடன் எதிர்பார்த்த நாச்சம்மை செங்குட்டுவனும், மருமகன் லெட்சுமணனையும் குழந்தைகளையும் சந்தித்தோம். எல்லோருக்கும் சுவையான உணவு படைத்தனர். அங்கிருந்து நானும் என் மகன் திருவள்ளுவனும் காரில் புறப்பட்டு இல்லம் சேர்ந்தோம்.

இரண்டு நாட்கள் ஓடி மறைந்தன. நானும் தனியே வெளி இடங்களை அடுக்கு வீடுகளைச் சுற்றிப் பார்த்தேன். காலையும் மாலையும் என் நேரம் கழிந்தது.

பைராவி மடக்காளியம்மன் கோவிலைத் தனியே சென்று தரிசனம் செய்தேன். காலை 11-00 மணி முதல் 12 மணி வரை கோவிலில் இருந்தேன். கோவிலுக்குச் செல்லும் வழியில் சுற்றியும் வளைந்தும் நேரில் பலகோணங்களில் இருந்து அந்தச் சாலைகளைச் சுற்றி வந்தேன். எங்கு நோக்கிலும் ஒழுங்கு இருந்தது. அது உலகிலேயே இங்குதான் இருப்பதாகச் சொன்னார். குறிப்பாக சாலையைக் கடக்கும் பொழுதும் நாம் நடந்து செல்லும் போதும் இருபக்கமும் நாம் கரையைச் சேரும் வரை வாகனங்களை நிறுத்தி விடுவார்கள். இது அசாதாரணமாக நிலை. சிங்கப்பூரின் சட்டம் அப்படித்தான் சொல்கிறது. சாலையைக் கடப்பவன் அந்நியராக இருந்தாலும் பிரதேசத்து மனிதர்களாக இருந்தாலும் அவர்கள் சாலையைக் கடக்கும் வரை அவர்களை மோதி விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது தான் அந்தச்சட்டம்.

மாலையில் என் போக்கில் ஒவ்வொரு அடுக்காகப் பார்த்துக் கொண்டு இரவு வீடு திரும்பினேன். பார்க்கப் பார்க்க சிங்கப்பூர் நகரம் பரவசமாகத் தெரிந்தது. இரவு இன்பமாக உறங்கினேன்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. அன்றைய தினம் இன்னொரு நண்பரின் புதுமனை புகுவிழாவிற்குச் சென்றோம். அந்த இடம் சற்றே ஒடுக்கமாக இருந்தது. வீட்டினுள் இருந்த பெருமக்கள் அனைவரும் என்னைக் கண்டு அன்புடன் வரவேற்றனர். வீட்டின் சொந்தக்காரர் சந்திரசேகரன் வீட்டின் ஒவ்வொரு பகுதியையும் எனக்கு உற்சாகமாகக் காண்பித்தார்.

விருந்து முடிந்ததும், நானும் என் மகன் திருவள்ளுவனும் மருமகள் லெட்சுமியும், பேரன் கௌதமனும் சொல்லிக் கொண்டு தயாரானோம். அப்பொழுது அதுவரை என்னைக் கவனித்துக் கொண்டு இருந்த புதிய அன்பர் என்னிடம் வந்து “ஐயா உங்கள் பெயர் நாவுக்கரசரா” என்று வினவினார். அந்த பெயரை உறவினர் யாரும் அறியா நிலையில் அவர் நண்பர் மாரிமுத்து அழைத்ததும் என் உடம்பில் பரவசம் ஏற்பட்டது. ஐயா ஆம் என்பெயர் நாவுக்கரசர் தான். தாங்கள் எப்படி இங்கு உள்ளீர்கள் என்று வினவினேன். அப்பொழுது நண்பர் மாரிமுத்து தான் மானாமதுரைச் சேர்ந்தவன் என்றும் 1996 ஆம் வருடம் தான் பயின்ற அமராவதிபுதூரில் இருந்த குருகுலத்தில் எனது கையால் பரிசு பெற்றதாகவும் சொல்லி கொண்டிருந்தார். நான் வியந்து கொண்டாடி மகிழ்ந்தேன். அன்றைய தினம் சித்திரா பௌர்ணமி என்பதால் மாரிமுத்துவின் நட்பையும் பாராட்டையும் பெற்றதில் மகிழ்ச்சி கொண்டிருந்தேன். திருவள்ளுவர் பெருமை உலகமெல்லாம் பாராட்டப்படுவதாக அறிந்தேன். இக்காட்சி என்னைப் புதுமைகாண வைத்தது.

மாலையில் சிவதுர்க்கா கோவிலுக்கு என் மகன் திருவள்ளுவனுடன் காரில் சென்றேன். தரிசனம் அருமை. காரைக்குடி முத்துக் குருக்களின் சகலை வரவேற்று எனக்கு பழங்கள் தந்தார். பரவசம் கொண்டேன். துர்க்கையின் பெருந்தோற்றம் என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. அருமையான கோவில். அற்புதமான சந்நிதி. இரவில் வீடு திரும்பினோம்.

அடுத்தநாள் என் காலைப்பொழுது வீட்டில் கழிந்தது. மாலையில் தனியே உலாவரத் தொடங்கினேன். அப்பொழுது அந்த நண்பரைச் சந்தித்தேன். அவர் பெயர் சிவசுப்பிரமணியன். ஊர் சுற்றிவருகையில் எண் கண்கள் ஒரு இந்தியரைத் தேடியது. அப்பொழுதுதான் அந்த நண்பர் கிடைத்தார். நீண்ட நேரம் உரையாடினோம். பயனுள்ள சந்திப்பு என மகிழ்ந்தேன்.

மறுநாள் சிங்கப்பூரின் செல்வ மாறுபாடு பற்றிய என் கேள்விக்கு விடைகிடைத்தது. சிவசுப்பிரமணியத்தால். ஆம். ஒரு சாதாரண வழக்கறிஞர் தன் துணைவியுடன் சேர்ந்து இந்தப் பெரிய வெற்றியை அடைந்தார் என அறிய முடிந்தது.

சிங்கப்பூரின் பழைய கதை எல்லா நாடுகளிலும் உள்ளது போலவே இருந்தது. அப்பொழுது வழக்கறிஞர் லீ குவான் லியூ தனியே இதுபற்றிச் சிந்தித்தார். அவர் மனைவி வழக்கறிஞர். அவரும் துணை சேர்ந்தார். 1966 ஆம் ஆண்டு சிங்கப்பூர் மலேசியாவிலிருந்து தனி உரிமை பெற்றது. சிங்கப்பூரைச் சமைத்த சிந்தனையாளரை நான் வாழ்த்தினேன்.

1) கடல் முழுதும் அமைந்து சிங்கப்பூர் ஒரு தீவாக இருந்தது. 2) துறைமுகம் வாய்ப்பு மற்ற நாடுகளை விட இங்கு அதிகம். 3) வான்வழி விமானங்கள் இம்மூன்று வசதிகளை மட்டும் கொண்டு இந்த வகையில் அற்புத ஆட்சியைத் தானே தன் மனைவியுடன் அமைத்தார். லீ குவான் லியூ. சிவசுப்பிரமணியன் இந்த விவரங்களைச் சொல்லக் கேட்டு எனக்கு மகிழ்ச்சி. லீ குவான் லியூ தானே இரவில் தனியே பயணம் செய்து இரவு மோசடிக்காரர்களை பிடித்து விசாரணை நடத்துவாராம். வெளிநாட்டுக்கு அனுப்பி விடுவாராம். இப்படிப் பலதரப்பட்ட சாதனைகளால் தான் சிங்கப்பூர் இந்த வகையில் வெற்றிகரமாக உள்ளது என்பதை அறிந்து வியந்தேன். தாதாக்களை ஒழித்து சிங்கப்பூரை உருவாக்கிய சீன வழக்கறிஞர் லீ குவான் லியூ நம் வாழ்த்துக்கு உரியர். சிங்கப்பூரை செம்மை செய்ய அவரது வழக்கமான நிலையான காரியங்கள் பலவாகும்.

லீ குவான் லியூ செய்த வேலைகள் பல. அவற்றுள் மிக முக்கமானது. அரசு அலுவலர்களை அழைத்து அவருக்குக் கொடுக்கப்பட்ட ஊதியத்தில் பாதியை மட்டும் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று கோரிக்கை வைத்தார். மீதியைச் சேர்த்து பின்னால் பொருளாதார நிலை மேம்பட்டதும் தருவதாகச் சொன்னதையும் ஏற்றுக் கொண்டனர். அரசு அலுவலர்கள். இவ்விதம் பொருளாதாரத்துறையில் மாற்றம் செய்தார்.

மறுநாள் காலையில் மழை பெய்தது. மழை விட்டதும் உலாவச் சென்றேன். மாலையிலும் உலா தொடர்ந்தது. எங்கு பார்த்தாலும் என் உள்ளம் கவர்ந்த சூழல். எனக்குப் பிடித்தமான ஒழுங்கு என் உள்ளத்தைக் கவர்ந்தது.

அடுத்த நாள் பொழுது புலர்ந்தது. காலையில் என் மருமகளிடம் சொல்லி விட்டு தனியே நடைப்பயணம் சென்றேன். முதலில் வைராவி மடக்காளியம்மன் கோவில் தரிசனம். வழியில் சீனர்களின் ஆலயம். அதையும் வணங்கினேன்.

மாலையில் அனைவரும் பாதாள ரயிலில் பயணம் செய்தோம். புயல் வேக ரயில். பிராண்டிட் நிலையத்தில் தோ பயா பகுதியிலிருந்து புறப்பட்டது. கடற்கரை நிலையங்களைத் தாண்டி நின்றது. அதிலிருந்து இறங்கி கடற்கரைப் பகுதியைக் காணச் சென்றோம். வழியில் சாயா குடித்தோம்.

சிங்கப்பூரை அழகுபடுத்தும் சிங்கச்சிலையிலிருந்து எப்பொழுதும் நீர் கொட்டுகிறபடி அமைக்கப்பட்டிருந்தது. எழில்மிகு காட்சியைக் கண்டு மகிழ்ந்தேன். என்மருமகள் பேரன் மனோக்ரன் எல்லோரும் காட்சியைக் கண்டு அதிசயத்தோம். ரயில்வே நிலையத்திலிருந்து பிராடெல் நிலையம் வரை MTR ரயிலில் சொகுசுப் பயணம்.

மறுநாள் காலை நான் தனியே உலாவத் தொடங்கினேன். சிங்கப்பூரின் ஒழுங்கு முறை அதை நிர்வகிக்கும் ஆற்றல் இதையெல்லாம் என் சிந்தனையை மகிழ்வித்தன. மாலையில் செர்ரிபழம் சாப்பிட்டேன். அப்பழம் லேசான புளிப்பாய் இருந்தது.

சிங்கப்பூரை உருவாக்கிய சிற்பி என்று வர்ணிக்கப்படும் நல்லார். ஊரை மிகவும் அழகுபடுத்தியிருக்கிறார். சிங்கப்பூரில் தென்படும் பாதாளப் பாதை என்னைப் பெரிதும் கவர்ந்தது. பாதாளப்பாதைகள் நிறைய உள்ளன. அவற்றுள் குறுகியதும் கண்டேன். சுமார் 2 கிலோமீட்டர் வரை நீளமானதும் கண்டேன். அவற்றைக் காரில் கடந்தான் என்மகன் திருவள்ளுவன்.

காரில் ஒரே வேகத்தில் சுமார் 60 கி.மீட்டர் வரை செல்லவேண்டும். பாதாள பாதையின் நீளத்தைக் கடக்கும் போது பட்டப்பகலில் விளக்குகள் எரிவது கண்டு மிகவும் மகிழ்ந்தேன். அவ்வளவு தூரம் அழகாக இருந்தன. அந்தப் பாதாளப் பாதைகள். அவற்றில் ஒரே வேகத்தில் செல்வதால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும் என்பதை உணர்ந்தேன். உண்மையாகப் பாதாளப் பாதைகள் அழகு நேரில் பார்த்தால் தான் புரியும். வர்ணித்தால் முழுமையாக இருக்காது.

லி சியான் லூங் என்ற சீனர்தான் சிங்கப்பூரின் பிரதமர். லி குவான் லியூ அவர்களின் மகனாவான். இவரைப் பிரதமராகவும் தந்தை லி குவான் லியூ சாதாரண அமைச்சராகவும் இருக்கச் செய்து ஆட்சி திறம்பட நடக்கிறது. முத்தரப்பு ஆட்சி அரசாங்கம் முதலாளிகள் தொழிலாளர்கள் என்ற மூன்று பிரிவினரையும் ஒரு சேர ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தி நல்லுறவுடன் சிங்கப்பூரை ஆட்சி செய்கிறார் லி குவான் லியூ.

திருவள்ளுவனுக்கு ஓய்வு. வீட்டில் இருந்து ஓய்வெடுக்கிறார். சந்திரமுகி - கொண்டு வந்து வீட்டில் படம் பார்த்தேன். அப்போது நாட்டில் முதல் அதிபர் லி.கம்.லி மறைந்து போனார். அரசமரியாதைகளுடன் அவரது உடலும் நல்லடக்கம் நடைபெற்றது.

இன்று நாள் பிறந்ததும் மகிழ்ச்சியான செய்தி கிடைத்தது. கலையரசி இராமசாமிக்கு ஆண் மகன் பிறந்திருக்கிறது என்ற செய்திதான் அது. மாலையில் மழை பிடித்தது. தொடர்ந்து மழைச்சாரல் இருந்தது.

செம்மொழிச் சிறப்பு தமிழுக்குக் கிடைத்துள்ள செய்தி அறிந்து மிகுந்து மகிழ்வித்தேன்.

தொன்மை, இயன்மை, தூய்மை, தாய்மை
முன்மை, வியன்மை, வாய்மை, மறைமை,
எண்மை, இளமை, இனிமை, தனிமை,
ஒண்மை, இறைமை, அம்மை, செம்மை,

என்ற சிறப்புத் தொடரில் செம்மொழிச் சிறப்பு தமிழ் பெற்ற பெருமைதான்.

இதற்கிடையில் அனுமதிச் சீட்டு (பாஸ்போர்ட்) அலுவலகத்திலிருந்து அனுமதி வந்தது. காலை 9 மணி முதல் அனுமதி. நல்ல முறையில் அனுமதிச்சீட்டு நிகழ்வு முடிந்து வீடு திரும்பினோம்.

பிரிடனில் டோனி பிளேயரின் தொழிலாளர் கட்சி முறையாக ஆட்சிக்கு வந்தது என்று பாராட்டினேன்.

அங்கிருந்து காரில் திருவள்ளுவனுடன் நாச்சம்மை ஆச்சி வீடு சென்றோம். அந்த வீட்டில் ஆச்சி இருந்து உபசரித்தார்கள். பருகக் காபி தந்தார்கள். இந்தியாவைப் பற்றியும் தேனப்பன் நலம் பற்றியும் விசாரித்தார்கள். முப்பது ஆண்டுகள் கழித்து அவர்களைப் பார்த்ததில் மகிழ்ச்சி. அருண் செங்குட்டுவன் தொலைபேசியில் பேசினார். மறுநாள் மாலை தன் வீட்டிற்கு வர வேண்டினார். அதன்படி அவர் இல்லம் சென்று வந்தேன்.

இரவு 7 மணி முதல் 9 மணி வரை சிங்கப்பூர் நகரை சுற்றிச் சுற்றி பல இடங்களைப் பார்த்துப் பரவசம் ஆனேன். கண் கொள்ளாக் காட்சிகள் எங்கு நோக்கிலும் ஒழுங்கு தான் என் உள்ளத்தை மகிழ்வித்தது பார்க்க பார்க்க திகட்டாத தேன்சிந்தும் காட்சிகள்.

மறுநாள் வைராவி மடம் காளியம்மன் கோவிலுக்குச் சென்று அங்குள்ள தெய்வங்களை வழிபட்டேன். வழக்கமான நடையில் சென்றேன். எங்கு நோக்கிலும் பல்வேறு வாகனங்கள் ஒன்றையொன்று முந்தாமலும் தம் வேகத்தைக் குறைக்கவோ கூட்டவோ இல்லாமல் எல்லாம் ஒரேமாதிரி வேகத்தில் சென்றன.

மாலையில் நண்பர் சிவசுப்பிரமணியத்துடன் உரையாடினேன். அவர் என்னை மாதிரி தேசபக்தர் ஆவார். அவரிடமிருந்து பழைய செய்திகள் அண்ணாவைப் பற்றி பெரியாரைப் பற்றித் தெரிந்து கொள்ள உதவியாக இருந்தது. வெளியே அடைமழை. கையில் குடையுடன் சிவசுப்பிரமணியத்தின் இல்லத்திலிருந்து நான் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றேன்.

மழை விட்டதும் வெளியே உலாவப்புறப்பட்டேன். சார்ட்டிங்க் ஏர்போர்ட் பிரமிடல் சாலையைக் கடந்து ரிஸ்க் ஈட்டிங் ஹவுஸ் என்ற இடத்திற்கு வந்தோம். பல்வேறு காட்சிகள் நெஞ்சுக்கு பலம் தந்தன.

பகலில் உணவிற்குப் பின்னர், மாலையில் கோவில் தரிசனம் செய்தேன். வைராவி மடம் காளியம்மன் கோவிலில் தரிசனம் அங்கிருந்து நடைப்பயணமாக மத்திய நூலகக் கட்டிடம் அங்கிருந்து நீர்வீழ்ச்சி கடைவீதிகள் எல்லாம் சுற்றி வந்தேன்.

மறுநாள் இடிமழை பிரமாதமாய் இருந்தது. மழை என்றால் இதுதான் மழை என்று சிங்கப்பூரின் மழை இதமாக இருந்தது. கண்டு நான் ரசித்தேன். மழை ஓய்ந்தது. தர்மன் சண்முகரத்தினம் என்ற இளம் அமைச்சர். தமிழர் கல்வித்துறைக்கு பொறுப்பானவர் வந்து உரையாற்றினார். அப்பொழுது அவர் சிங்கப்பூர் தமிழர்கள் இருவரை

சந்தித்தேன். இரு தமிழர்களும் இந்தியாவைப் பாராதவர்கள். அவர்களின் தமிழ்ப்பற்று என்னைப் பெரிதும் கவர்ந்தது.

மிகவும் பிரம்மாண்டமான நூலகத்தைத் தேர்வு செய்து உள்ளே பல்வேறு நூல்களைப் பார்த்தேன். அதில் அரிமதிதென்னகன் என்ற புதுச்சேரி எழுத்தாளரின் கதைப் புத்தகம் ஒன்று படித்தேன்.

அங்கிருந்து கால்நடையாகப் புறப்பட்டு தோபயா பிளாட்டு, தோபையா லிப்ரியா, சிங்கப்பூர் அச்சகம் முதலான பகுதிகளுக்குச் சென்றேன். அற்புதமான அமைப்பு. கண்ணைக் கவரும் வண்ணங்கள். எல்லாம் கண்டேன். என் உள்ளம் இனித்தது.

கோ லோடோங்க் என்ற மூத்த அமைச்சர். அப்பொழுது அப்பகுதிக்கு வந்தார். அவரைக் கண்டேன். அங்கிருந்து பீட்டி உயர்நிலைப்பள்ளிக் கட்டிடம் சென்றேன். அழகிய அமைப்பு அற்புதமான கட்டிடங்கள். கண்கவர் வண்ணங்கள் கண்டேன். களிப்புற்றேன். சிங்கப்பூரின் அழகு எத்தனை உயர்வு என்றாலும் இந்த உயர்வுக்கு ஈடு இல்லை. அங்கு என்னை சிங்கப்பூர் மணியம் என்ற இன்ஸ்பெக்டர் சந்தித்து உரையாடினர். நண்பர் சாம்பசிவம் இந்தியா பயணம் ஆனார்.

செர்ரீ பழம், பொரியான் பழம், உருண்டையாக இருந்தது. அது மிகவும் சுவையாக இருந்தது.

அன்று விஷ்ணு ஸகாராம் காண்டேகர் என்ற எழுத்தாளரின் மணி விழா நடைபெற்றது. அதில் இந்தியாவின் மூத்த மொழி, தென்மொழி என்று செந்தமிழின் நிலை போற்றப்பட்டது.

மறுநாள் வைராவி மடக் காளியம்மன் தரிசனம் முடித்துக் கொண்டு சிங்கப்பூர் உயிர்க்கட்சி சாலையைப் பார்க்க நானும் திருவள்ளுவன், லெட்சுமி, கௌதமன் ஆகியோர் சென்றோம்.

அங்கே பல்வேறு மிருகங்களைப் பார்த்தோம். அவற்றுள் வெள்ளைப்புலி மூன்று, யானைகள் மூன்று, மனித குரங்கள் எல்லாம் காணலாம். இதர மிருகங்கள், எல்லாம் கண்ணுக்கு விருந்தாக இருந்தன. டிராம் வண்டியில் ஏறி உல்லாசப்பயணம் செய்தோம்.

அவைகளின் சுற்றுப்புறச் சூழல்கள் தனித்தனியே அழகுற இருந்தன. **MRT (Mass Rally Transfer)** பாதாள ரயில் பற்றியது. **LRT (Light Real Transfer)** இவ்விதம் பல்வேறு அமைப்புகள் அங்கே இருந்ததைக் கண்டு அதிசயித்தேன்.

மறுநாள் எல்லோரும் செண்டோஸா என்ற தீவுப் பகுதிக்குச் சென்றோம். டூரியன் பழப் (பலாப்பழம் போன்றது) இரு சுளைகள் தந்தான். உண்டேன்.

அங்கிருந்து தேக்கா கடைப்பகுதி சென்றோம். அது தமிழர்கள் வாராவாரம் சந்தித்து உரையாடும் பகுதி. எல்லாம் கண்டேன்.

அன்று விசாக பௌர்ணமி. கௌதம புத்தர் திருவள்ளுவர் இருவரும் பிறந்த நாள் அது. அன்றைய தினம் என் பேத்தி சுசிலா பிறந்த நாளும் ஆகும்.

மாலையில் பைராவி மடக் காளியம்மன் கோவிலுக்கு நடையாக நடந்து சென்று கண்டேன். 5-30 மணி முதல் 7-30 மணி வரை கோவிலின் எல்லாப் பகுதியையும் சுற்றிப் பார்த்தேன்.

அங்கிருந்து சிவசுப்பிரமணியத்தைப் பார்க்கச் சென்றேன். அங்கு ஆசிரியர் மன்றப் பொதுச் செயலர் மீனாட்சி சுந்தரத்தின் கருத்தை ஒத்து என் கருத்தும் இருந்தது. தமிழைத் தாழ்த்திப் பேசியது பேச்சுக்கு, மீனாட்சி சுந்தரம் கொடுத்த பதிலடி என்னைக் கவர்ந்தது. மறுநாள் என் பேத்தி அன்னம் பிறந்த நாள். வாழ்த்துக் கூறியும் வழிபாடு செய்து கொண்டோம். வைராவிமடக் காளியம்மன் கோவிலுக்கு நடந்து சென்று என் பிரார்த்தனையை நிறைவேற்றினேன். அங்கு சிவக்குமார் என்ற ஆவுடையார் கோவில் குருக்களை சந்தித்து உரையாடினேன்.

அன்றைக்கு மறுநாள் திருவள்ளுவன் பிறந்த நாள் வந்தது. சிரங்கன் ரோட்டில் உள்ள ஆலயத்தில் பிரார்த்தனை முடித்து அருகில் உள்ள சரவணபவன் என்ற விருந்தளிக்கும் இல்லத்தில் விருந்து உண்டோம். அருமையாய் இருந்தது. தமிழகத்திற்கும் சிங்கப்பூருக்கும் இடையில் வெள்ளி என்ற டாலரைத் தவிர வேறுபாடு வேறு இல்லை.

சிவசுப்பிரமணியத்துடன் பேச்சு முடிந்தது. அங்கிருந்து கடற்கரைச் சுற்றுலாச் சென்றேன். கடலில் இறங்கிக் கொஞ்சதூரம் பெரிய அலை வந்து என்னை நோக்கித் தள்ளியது. கரையில் சிறுவர்கள் விளையாடி மகிழ்ந்தனர். எங்கும் மனித வெள்ளம். மனிதருக்கு மனிதர் எத்தனை வேறுபாடு. டிராம் வண்டியில் ஏறி கொஞ்ச தூரம் சென்றோம். எலுமிச்சைச் சாறு பருகினோம். மாலையில் நிலவைக் கண்டு மகிழ்ந்தேன்.

அப்பொழுது சிங்கப்பூரின் கட்டாய ராணுவச் செயல் பற்றி தகவல்களைத் திருவள்ளுவன் கூறினான். எல்லா இடமும் 15 வயது நிரம்பியதும் கட்டாய ராணுவ வேலையில் பயிற்சியும் அலுவலும் வேண்டும். ஜெயராமன் என்ற போலீஸ் இன்ஸ்பெக்டரைச் சந்தித்தேன். அவரும் இந்தியா தெரியாது என்றார். அவர் பிறந்தது தென் ஆப்பிரிக்காவில் பணியாற்றுவது சிங்கப்பூரில். இவர்தம் இந்தியாவைத் தெரியாத தமிழர்கள் நிறைய இருப்பதாக அவர் கூறினார்.

சந்தித்தேன். இரு தமிழர்களும் இந்தியாவைப் பாராதவர்கள். அவர்களின் தமிழ்ப்பற்று என்னைப் பெரிதும் கவர்ந்தது.

மிகவும் பிரம்மாண்டமான நூலகத்தைத் தேர்வு செய்து உள்ளே பல்வேறு நூல்களைப் பார்த்தேன். அதில் அரிமதிதென்னகன் என்ற புதுக்சேரி எழுத்தாளரின் கவிதைப் புத்தகம் ஒன்று படித்தேன்.

அங்கிருந்து கால்நடையாகப் புறப்பட்டு தோபயா பிளாட்டு, தோபையா லிப்ரியா, சிங்கப்பூர் அச்சகம் முதலான பகுதிகளுக்குச் சென்றேன். அற்புதமான அமைப்பு. கண்ணைக் கவரும் வண்ணங்கள். எல்லாம் கண்டேன். என் உள்ளம் இனித்தது.

கோ லோடோங்க் என்ற மூத்த அமைச்சர். அப்பொழுது அப்பகுதிக்கு வந்தார். அவரைக் கண்டேன். அங்கிருந்து பீட்டி உயர்நிலைப்பள்ளிக் கட்டிடம் சென்றேன். அழகிய அமைப்பு அற்புதமான கட்டிடங்கள். கண்கவர் வண்ணங்கள் கண்டேன். களிப்புற்றேன். சிங்கப்பூரின் அழகு எத்தனை உயர்வு என்றாலும் இந்த உயர்வுக்கு ஈடு இல்லை. அங்கு என்னை சிங்கப்பூர் மணியம் என்ற இன்ஸ்பெக்டர் சந்தித்து உரையாடினர். நண்பர் சாம்பசிவம் இந்தியா பயணம் ஆனார்.

செர்ரீ பழம், பொரியான் பழம், உருண்டையாக இருந்தது. அது மிகவும் சுவையாக இருந்தது.

அன்று விஷ்ணு ஸகாராம் காண்டேகர் என்ற எழுத்தாளரின் மணி விழா நடைபெற்றது. அதில் இந்தியாவின் மூத்த மொழி, தென்மொழி என்று செந்தமிழின் நிலை போற்றப்பட்டது.

மறுநாள் வைராவி மடக் காளியம்மன் தரிசனம் முடித்துக் கொண்டு சிங்கப்பூர் உயிர்க்கட்சி சாலையைப் பார்க்க நானும் திருவள்ளுவன், லெட்சுமி, கௌதமன் ஆகியோர் சென்றோம்.

அங்கே பல்வேறு மிருகங்களைப் பார்த்தோம். அவற்றுள் வெள்ளைப்புலி மூன்று, யானைகள் மூன்று, மனித குரங்கள் எல்லாம் காணலாம். இதர மிருகங்கள், எல்லாம் கண்ணுக்கு விருந்தாக இருந்தன. டிராம் வண்டியில் ஏறி உல்லாசப்பயணம் செய்தோம்.

அவைகளின் சுற்றுப்புறச் சூழல்கள் தனித்தனியே அழகுற இருந்தன. **MRT (Mass Rally Transfer)** பாதாள ரயில் பற்றியது. **LRT (Light Real Transfer)** இவ்விதம் பல்வேறு அமைப்புகள் அங்கே இருந்ததைக் கண்டு அதிசயித்தேன்.

மறுநாள் எல்லோரும் செண்டோஸா என்ற தீவுப் பகுதிக்குச் சென்றோம். டூரியன் பழப் (பலாப்பழம் போன்றது) இரு சுளைகள் தந்தான். உண்டேன்.

அங்கிருந்து தேக்கா கடைப்பகுதி சென்றோம். அது தமிழர்கள் வாராவாரம் சந்தித்து உரையாடும் பகுதி. எல்லாம் கண்டேன்.

அன்று விசாக பௌர்ணமி. கௌதம புத்தர் திருவள்ளுவர் இருவரும் பிறந்த நாள் அது. அன்றைய தினம் என் பேத்தி சுசிலா பிறந்த நாளும் ஆகும்.

மாலையில் பைராவி மடக் காளியம்மன் கோவிலுக்கு நடையாக நடந்து சென்று கண்டேன். 5-30 மணி முதல் 7-30 மணி வரை கோவிலின் எல்லாப் பகுதியையும் சுற்றிப் பார்த்தேன்.

அங்கிருந்து சிவசுப்பிரமணியத்தைப் பார்க்கச் சென்றேன். அங்கு ஆசிரியர் மன்றப் பொதுச் செயலர் மீனாட்சி சுந்தரத்தின் கருத்தை ஒத்து என் கருத்தும் இருந்தது. தமிழைத் தாழ்த்திப் பேசியது பேச்சுக்கு, மீனாட்சி சுந்தரம் கொடுத்த பதிலடி என்னைக் கவர்ந்தது. மறுநாள் என் பேத்தி அன்னம் பிறந்த நாள். வாழ்த்துக் கூறியும் வழிபாடு செய்து கொண்டோம். வைராவிமடக் காளியம்மன் கோவிலுக்கு நடந்து சென்று என் பிரார்த்தனையை நிறைவேற்றினேன். அங்கு சிவக்குமார் என்ற ஆவுடையார் கோவில் குருக்களை சந்தித்து உரையாடினேன்.

அன்றைக்கு மறுநாள் திருவள்ளுவன் பிறந்த நாள் வந்தது. சிரங்கன் ரோட்டில் உள்ள ஆலயத்தில் பிரார்த்தனை முடித்து அருகில் உள்ள சரவணபவன் என்ற விருந்தளிக்கும் இல்லத்தில் விருந்து உண்டோம். அருமையாய் இருந்தது. தமிழகத்திற்கும் சிங்கப்பூருக்கும் இடையில் வெள்ளி என்ற டாலரைத் தவிர வேறுபாடு வேறு இல்லை.

சிவசுப்பிரமணியத்துடன் பேச்சு முடிந்தது. அங்கிருந்து கடற்கரைச் சுற்றுலாச் சென்றேன். கடலில் இறங்கிக் கொஞ்சதூரம் பெரிய அலை வந்து என்னை நோக்கித் தள்ளியது. கரையில் சிறுவர்கள் விளையாடி மகிழ்ந்தனர். எங்கும் மனித வெள்ளம். மனிதருக்கு மனிதர் எத்தனை வேறுபாடு. டிராம் வண்டியில் ஏறி கொஞ்ச தூரம் சென்றோம். எலுமிச்சைச் சாறு பருகினோம். மாலையில் நிலவைக் கண்டு மகிழ்ந்தேன்.

அப்பொழுது சிங்கப்பூரின் கட்டாய ராணுவச் செயல் பற்றி தகவல்களைத் திருவள்ளுவன் கூறினான். எல்லா இடமும் 15 வயது நிரம்பியதும் கட்டாய ராணுவ வேலையில் பயிற்சியும் அலுவலும் வேண்டும். ஜெயராமன் என்ற போலீஸ் இன்ஸ்பெக்டரைச் சந்தித்தேன். அவரும் இந்தியா தெரியாது என்றார். அவர் பிறந்தது தென் ஆப்பிரிக்காவில் பணியாற்றுவது சிங்கப்பூரில். இவர்தம் இந்தியாவைத் தெரியாத தமிழர்கள் நிறைய இருப்பதாக அவர் கூறினார்.

சிங்கப்பூரில் நான்கு மொழிகள் ஆட்சி மொழிகளாக உள்ளன. மாண்ட்ரின் என்ற சீனமொழி, மலேசியா, ஆங்கிலம், தமிழ் ஆகிய 4 மொழிகள் சிங்கப்பூரில் அரசு மொழிகள்.

சிங்கப்பூரான மொத்த மக்கள் தொகை 42 லட்சங்கள் தான். லி குவான் யூ சிங்கப்பூரை வடிவமைத்த சீலர். சிங்கப்பூர் நாட்டின் மொத்த பரப்பளவு 250 சதுர மைல்கள். 1963-ல் சுதந்திரம் பெற்று சிங்கப்பூர் இதன் முழு உரிமை 1965-ல் தான் கிடைத்தது.

மறுநாள் சிங்கப்பூரில் இருந்து சென்டோசா என்ற பகுதிக்குச் சென்றோம். சென்டோசா டவுன் கிளப் என்ற அமைப்பு இருந்தது. கண்கவரும் வண்ண அமைப்பு. கடல் இரத்தினங்கள் (Sea Jewel) என்ற சிறிய மீன்கள் அங்கு நிறைய இருந்தன. 22 கலைநயமிக்க அழகிய ஏற்பாடு என்னைக் கவர்ந்தது. எத்தனை பார்த்தாலும் இனிக்கிற தோற்றங்கள்.

அப்பொழுது SKY TOWER (ஆகாயக் கோபுரம்) என்ற இடத்தில் எங்கள் சுற்றுலா இருந்தது. அதில் ஏறி அமர்ந்ததும் 200 மீட்டர் உயரத்துக்கு சுற்றி சுற்றி சென்றது. 72 பேர் மட்டும் உள்ளே இருந்தோம். இருநூறு மீட்டர் உயர்ந்து அந்த ஆகாயக் கோபுரம் இருந்தது. பரவசக் காட்சி. 360 டிகிரி வரை சுற்றி வரும் இந்த ஆகாயக் கோபுரத்தைப் பார்க்க பார்க்க அருமையாக இருந்தது. எல்லாவற்றையும் கண் களிக்கப்பார்த்து பரவசப்பட்டு இல்லம் திரும்பினோம்.

மறுநாள் சிங்கப்பூரின் உள்ளே உள்ள இடங்களைச் சுற்றிப் பார்க்க தனிநடையுடன் பவனி வந்தேன். அடுக்கு 103, அடுக்கு 106 ஆகிய இடங்களைக் கடந்து அந்த இடங்களில் கண்ட சுவை மிகுந்த பகுதிகளை எண்ணியவாறு சிங்கப்பூர் அச்சகம் கண்டு மகிழ்ந்தேன். புறம்போக்காக கிடந்த அப்பகுதி புதிய சிங்கப்பூரின் பூங்காவாகத் தோற்றமளித்துதான் என்னைக் கவர்ந்தது.

மறுநாள் பேரன் கௌதமன் பிறந்தநாள். எல்லோரும் வீரமாகாளியம்மன் கோயில் சென்று தரிசித்தோம். கருப்பர், காளி முதலான தெய்வங்கள் என்னைப் பிரமிக்க வைத்தன. அங்கிருந்து சரவணபவன் சென்று ரவா தோசை வகைகளை ருசித்துச் சாப்பிட்டேன்.

அப்பொழுது ஊருக்குத் திரும்ப வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் உருவாகத் தொடங்கியது. நானும் நண்பன் மனோகரனும் 56 ஆம் எண் பேருந்தில் ஏறிச் சென்றோம். பேருந்து பற்றி செய்தி சொல்ல வேண்டும். எல்லாப் பேருந்துகளும் A/C வசதி உண்டு. கட்டணம் டாலரில் தான்.

தேக்கா நிலையம் சென்றோம். நடந்து தான் சென்றோம். என் மகன் திருவள்ளுவன் வராததால் காரும் இல்லை. எல்லாம் பேருந்துதான். சிட்டிசன் கடிகாரம் வாங்கினோம்.

மாலையில் அருண் செங்குட்டுவன் இல்லத்திற்கு திருவள்ளுவனுடன் சென்றேன். கவிணி அரிசி, வடை, தோசை, தேநீர் என விருந்து நல்ல முறையில் நடந்தது.

வைராவி மடக்காளியம்மன் கோவிலில் தரிசனம் செய்தேன். காரைக்குடி வீரப்பப் பண்டாரம் வரவேற்று மிகுந்த உபசாரம் செய்தார். எல்லோரும் மகிழ்ச்சியாக இருந்தோம். சிவசுப்பிரமணியத்துடன் ரொட்டி, காபி, பருகினேன்.

ஊருக்குத் திரும்ப வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் மேலோங்கி நின்றது. ஆம் ஏப்ரல் திங்கள் 9 ஆம் நாள் இந்தியாவிலிருந்து பயணமாகினேன். இப்பொழுது ஜூன் திங்கள் ஆரம்பம். எனவே இருதிங்கள் காலம் ஆகிவிட்டது சிங்கப்பூரில்.

இந்தியா திரும்புகின்றேன் என்ற தகவல் மெல்ல என்னிடையே புகுந்து வளர்ந்தது. பழைய நண்பர்கள் என்னை வந்து பார்க்கத் தொடங்கினர். அவற்றுள் மிக முக்கியமானவர் காரைக்குடி இராஜாமணியின் மைத்துனர் மகன் செந்தில்நாதன் தான். என்னை வந்து மாலையில் சந்தித்தார். மிக நல்ல வாய்ப்பாக அதை நான் கருதினேன். என் மனங்குளிர பரிசுகளும் வாங்கி வந்து தந்தார்.

மறுநாள் சிவசுப்பிரமணியத்துடன் கலந்து உரையாடினேன். எங்கள் நட்பு எவ்வளவு ஆழமானது. ஊர்திரும்ப சாமான்கள் எல்லாம் வாங்கிவந்து திருவள்ளுவன் என்னிடம் தந்தான்.

சுங்கத்தீர்வை போடாமல் எனக்கு எவ்வளவு சாமான்கள் தந்தார்கள். சிங்கப்பூர் மக்கள் அவ்வாறு நல்லவர்கள். திருவள்ளுவன் கார் கொண்டு வந்தான். நானும் லெட்சுமி, கௌதமன், திருவள்ளுவன், மனோகரன் முதலானோர் விமான நிலையம் வந்தடைந்தோம். பிரம்மாண்டமான அந்நிலையத்தில் எத்தனை மக்கள், எவ்வளவு உபசரிப்பு எல்லாம் மனதுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது.

எல்லோரிடமும் விடைபெற்று விமானத்தில் என் இருக்கையை அடைந்தேன். சிங்கப்பூரை விட்டுப் பிரிகிறோம் என்பது எனக்குள் எழுந்த ஒரு நிலை. ஒழுங்கு நிறைந்த உல்லாச நகரம் என் உள்ளம் கவர்ந்த நகரம்.

அப்பொழுது விமானம் வானில் பறந்தது. என் எண்ணங்களும் பறந்தன. இன்னும் சிலமணிகளில் இந்தியா வந்து இறங்குவேன் என்று என் மனம் சொல்லிற்று.

சென்னையை வந்து சேர்ந்தது என் சிங்கப்பூர் விமானம் வழக்கமான காரணங்களினால் என் பயணம் தணிக்கை செய்யப்பட்டது. என் வருகையை எதிர்பார்த்தது. என் மகன் அன்பு அவன் துணைவி அல்லி, மகன் முகிலன் எல்லோரும் வந்து காத்திருந்து என்னை அழைத்துச் சென்றனர். அன்பு கொண்டு வந்திருந்த காரில் எல்லோரும் புறப்பட்டு சென்னை இல்லம் வந்தடைந்தோம்.

# கீழை இந்தியப் பயணம்

அணி மிகுந்த அந்தச் சுற்றுப் பயணத்தில் நானும் பங்கு கொள்ள வேண்டும் என்று என்னை அந்த நண்பர் அழைத்தார். குமரன் டிராவல்ஸ் என்ற அந்த நிறுவனத்தின் விளம்பரம் பார்த்து நானும் செல்வதென்று முடிவு செய்தேன்.

அன்று இரவு 10-30 மணிக்கு எங்கள் பயணம் தொடங்கியது. ஹௌரா விரைவு வண்டியில் அன்பு வழியனுப்ப 11-30 மணிக்கு புறப்பட்டு பயணம் நடந்தது.

விஜயவாடா சந்திப்பில் எங்கள் வண்டி நின்றது. 6004 ஆம் எண்ணுடைய அந்தப் புகையில்லா தொடர் வண்டியில் S4-31 என்ற இருக்கையில் எங்கள் பயணம் புவனேசுவரம் வந்தடைந்தது.

ஒரிசா மாநிலத்தின் தலைநகரம் புவனேசுவரம் அமைதியும் எழிலும் ஒரு சேரத் திகழ்கின்ற அழகான இடம் புவனேசுவரம். இந்தியக் கூட்டமைப்பில் ஒரிசா மாநிலத்திற்கு அழகான தலைநகரம் கிடைத்திருக்கிறது.

கண்ணுக்கு எட்டிய தூரம் பசுமை கொழிக்கும் இடம். தென்னையும் கமுகும், பச்சை மரங்களும் எழில் கொழிக்கும் திகழ்கின்ற இடம் புவனேசுவரம். உண்மையில் எனது இறுதிக்கட்டத்தில் இந்த இடம் தான். ஒரிசாவின் தலைநகரம் தான். கிடைக்க வேண்டுமென்று கனாக் கண்டேன். அந்த அளவு எழில் கொஞ்சும் ஊர்.

புவனேசுவரத்திற்கு அப்புறம் பூரி தனி இடம். சுற்றிலும் இயற்கைக் காட்சிகள். கண்கவரும் இடங்கள். அழகு தேவதை அணி வகுத்தது போன்ற தோற்றம். என் உள்ளம் கவர்ந்த இடம்.

பூரியில் ஜகநாதர் ஆலயம், பரசுராமன் ஆலயம், சுபத்திரா தேவி ஆலயம் எல்லாம் கூட்டம் நிறைந்து காணப்பட்டது. காலையில் சூரிய உதயத்தில் என் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு உடம்பில் பசும் நீர் குளித்து உடைமாற்றிக் கொண்டு புறப்பட்டேன். தேநீர் வாசலில் வியாபாரம் மும்மரமாக நடந்தது. நடந்து சென்று ஒரு குவளை வாங்கினேன். எவ்வளவு சுவை அந்த தேநீர். அந்த தேநீருக்கு ஈடு இல்லை;

அப்பொழுது என்னையும் மிஞ்சிக் கவிதை பிறந்தது.

அது இது-

வடநாடு செல்வோரை வரவேற்கும் ஒரிசாவில்
இடந்தேடும் கூட்டம் ஏனோ இருக்கவில்லை
புவனேசு வரம்நகரம் ஒரிசாவின் பெருநகரம்
அவனியின் மாற்றங்கள் அனைத்தையும் ஏற்கவில்லை

தென்னையும் வயலும் சேர்ந்து இனிய கனிமரமும்
முன்னைப் பழமையுடன் இன்னிசைக்கும் மாநிலமே
நோக்கும் இடமெல்லாம் நுகர்ந்திடும் பழமரங்கள்
தேக்கும் கமுகுமே தீஞ்சுவைப் பலாமரமும்
நாக்கில் இனிக்கும் நல்வகை மாமரமும்
பூகரும் வயற்காட்டில் பொலிகின்ற பேரழகு
ஒரிய மொழிபேசுகின்ற உன்னதப் பழங்குடிகள்
அறிந்திட முயல்கின்ற அண்டைஇன மக்களுமாய்
தெரிந்து தெளிந்திருக்கும் செழுமைமிகு ஒரிசாவாம்
அரிதான மாநிலத்தின் கீழ் இருக்கும் வங்கக்கடல்
அழகை அழகாக்கும் அதிசய மாநிலமே!
பழகிய மக்களும் பழம்பெருமை சேர்க்கின்றார்
அரிதான சாலைகள் அங்கொன்றும் இங்கொன்றும்
தெரிகின்ற இருசக்கர வாகனங்கள் சேர்ந்தஇடம்
மக்களுமே புதுமையின் மயக்கத்தில் சிக்காமல்
எக்கணமும் ஒரிசாவின் இயல்பினிலே இருப்பவராம்
காய்ச்சிய பசும்பாலில் தேத்தூளைச் சேர்த்துப்பின்
ஒன்றாக்கி ஊற்றுகின்றார் இருரூபாய் வாங்குகிறார்
கனியிலும் இனிமைமிகும் மனிதர்கள் ஏராளம்
இனிய ஒரிசாவில் இருந்திட எண்ணமே
இப்படிக் கவிதை என் உள்ளத்தில் பிறந்தது.

பூமி ஜெகநாதன் ஆலயம் பார்த்துப் பின்னர் "கோள்ஆர்க்" சூரியனார் ஆலயம் கண்டோம். தஞ்சைப் பெரியகோவில் போன்ற அமைப்பு. சூரியனார் கோவில் அழகாக இருந்தது.

கோனாரக் சூரியனார் கோவிலின் உள்ளே நுழைவுக் கட்டணம் வசூலிக்கிறார்கள். கோனாரக்கில் தனியே படம் எடுத்துக் கொண்டேன். இந்தியச் சுற்றலாத்துறைக்குச் சொந்தமானது. இந்த கோனாரக் ஆலயம் பின்னர் லிங்கராஜா ஆலயம் பார்த்தேன்.

ஒரு சிறு இடைவேளை கிரிக்கெட் பார்க்கின்ற வாய்ப்புக் கிடைத்தது. இந்திய தென்ஆப்பிரிக்க அணிகளுககிடையே ஆன ஆட்டம். அதில் யுவராஜ் சிங் அரை சதம் அடித்தார்.

இரவு 10 மணிக்கு ஜெகநாதர் விரைவு வண்டியில் (எண் 8410) கல்கத்தாவுக்கும் பயணம் ஆனோம்.

கல்கத்தா-கொல்கத்தா - நகருக்கு காலை 8-30 மணிக்கு வந்தடைந்தோம். ஹூக்ளி நதியின் கம்பீரம் ஹௌரா பாலம், பேலூர் ராமகிருஷ்ணாலயம் பூமிக்கு அடியில் ஓடும் பாதாள ரயில் முதலான இடங்களைப் பார்த்தேன்.

ஹூக்ளி நதியில் நீராடினேன். அழகான அருமையான குளிர்ச்சியான குளியல். உடலுக்கு இதமாக இருந்தது. கொல்கத்தா அழகான ஊர். இங்கு தான் எங்கள் அய்யா கொண்டு விற்று வந்ததாகச் சொன்னதால் அந்த இடங்களைச் சென்று பார்த்தேன்.

கொல்கத்தா டிராம் வண்டிகள் இந்திய வரலாற்றில் இன்றும் இருக்கிற பாங்கு என்னைக் கவர்ந்தது. எங்கு பார்த்தாலும் கூட்டம் அதிகமாக இருந்தது. ஆனால் நாகரீக வளர்ச்சி அதிகமாகப் படவில்லை. நாள் முழுவதும் கொல்கத்தா நகர் பார்த்து பார்த்து மகிழ்ந்தோம்.

இரவு ஜோத்பூர் விரைவு ரயிலில் (எண் 2569) பயணம் ஆனோம். காலை 8-30 மணிக்கு கயா நகரை அடைந்தோம். அருமையான இடத்தில் எல்லோரும் தங்கினோம். அருமையான குளியல்.

கயாவில் மறைந்த பெரியவர்களுக்கு திவசம் கொடுக்க நண்பர்கள் திட்டமிட்டார்கள். நானும் பங்கு கொண்டு அத்திட்டத்தில் சேர்ந்தேன். பெரிய ஆறு. ஆனால் தண்ணீர் இல்லை. அப்படிப்பட்ட ஒருநிலை. திவசம் மூன்று மணிநேரம் நடந்தது. அதில் தட்டு, தாம்பளம், ஆடைகள், மணிகள் என அனைத்தும் இருந்தன. திவசம் கொடுத்தது எனக்கு மிக அமைதியாக இருந்தது.

பின்னர் அனைவரும் விஷ்ணுபாதம் பார்த்தோம். எங்கு நோக்கிலும் தேநீரின் குவளைகளின் பங்கு நிறைய இருந்தது. அமைதியாக இருந்த கயா நகரம் என்னைக் கவர்ந்தது. உண்மையில் கயாவில் தானம் கொடுத்தால் அது யுகம் யுகாந்திரம் வரை வேறு இடத்தில் தானம் செய்வதை விட சிறந்தது என்று சொன்னார்கள்.

இரவு 9 மணிக்கு ஜம்மு விரைவு வண்டியில் (எண் 3151) கயாவிலிருந்து புறப்பட்டோம். அதிகாலை 5 மணிக்கு காசி நகரை அடைந்தோம்.

இங்கு எனது நண்பர் அண்ணாமலை அவர்களைப் பற்றிச் சில சொல்ல விரும்புகின்றேன். அண்ணாமலை கோவை மாவட்டம் திருப்பூர் பகுதியிலிருந்து என்னுடைய குழுவில் இணைந்து வந்து கொண்டிருக்கிறார். துணைத்தாசில்தாரராக திருப்பூர் பகுதியில் வேலை பார்த்தார் அண்ணாமலை, ஓய்வு பெற்றார்.

ஒரிசா மாநிலம் புவனேஸ்வரில் என்னுடன் பழக்கமாகி இந்தப் பத்து நாட்களும் என்னுடன் வருபவர். நல்லதோற்றம். சிவந்த மேனி. சாந்த முகம். நாட்டுக்கோட்டை நரத்தார் போன்ற தோற்றம். ஆனால் திருப்பூர் பகுதியில் ஏன் துணைத்தாசில்தாரராக இருந்தார் என எனக்கு காரணம் தெரியவில்லை.

அண்ணாமலை என்ற நண்பரைப் பற்றிய குறிப்பு. அலகாபாத் நகரில் இருந்து பிரிந்து ஊர் சென்ற குழுவில் இடம் பெற்றார். அதுவரை என்னுடன் ஈடுபாட்டுடன் பழகியவர். என் உள்ளம் கவர்ந்தவர்.

காசி என்றழைக்கப்படும் வாரணாசி நகரம் மூவாயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்தது. இங்கு கங்கை விரிந்து பரந்து சென்றது. கண்கொள்ளாக் காட்சி. கங்கையில் நீராடி தர்ப்பணம் கொடுத்தோம்.

காசி விசுவநாதர் தரிசனம் செய்தோம். காசி விசாலாட்சி தரிசனம் கிடைத்தது. அன்னபூரணி தரிசனத்திற்கு கூட்டம் அலைமோதிக் கொண்டு இருந்தது.

காரைக்குடி கணேசனுடன் தங்கினேன். அவரது அறிமுகத்தில் பொருட்கள் வாங்கினேன். என் மகன் மாதவனுடன் தொலைபேசியில் பேசினேன். காசி என்னை மகிழ்வித்தது உணர வைத்தது. எல்லோரும் ஆழ்ந்து தூங்கினோம். அருமையான ஓய்வு. கடிதங்கள் எல்லோருக்கும் எழுதி அதைக் கட்டில் சேர்ப்பித்தேன்.

குமரன் டிராவல்ஸ் நண்பர்கள் அன்றைய தினம் எல்லோருக்கும் வடை பாயாசத்துடன் விருந்து பரிமாறினார்கள். இடையில் சோறுபடைத்து, கறி வகைகள் வைத்தது எல்லாம் அருமையாக இருந்தது.

இரவு 12 மணிக்கு அனைவரும் அயோத்தி பயணம் ஆனோம். தனி வண்டியில் 250 கி.மீ. சுற்றினோம்.

மறுநாள் காலை 6-30 மணிக்கு அயோத்தி அடைந்தோம். அது ஒரு அமைதியான இடம். இந்திய வரலாற்றில் எத்தனையோ நிகழ்வுகள் அயோத்தியை வைத்துத்தான் நடக்கின்றன. அவ்வளவு முக்கிய இடம் அயோத்தி.

சரயூ நதி வெள்ளம் பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது. அதில் நீராடி மகிழ்ந்தோம். ராமஜென்ம பூமி அயோத்தி ராமர் ஆலயம் அதில் பாபர் மசூதி இடிந்த இடம், ராமருக்கு வழிபாடு செய்யும் சன்னதி இத்தனையையும் கடுமையான ராணுவக் கட்டுப்பாட்டுக்கு இடையில், பாதுகாப்புக்கு மத்தியில், பார்த்தோம். ஏன் இந்த மாற்றம். எதற்கு இந்த இடம் இடிக்கப்பட்டது என்ற கேள்விகள் என் மனதில் அலை மோதின.

காலையில் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு தனிக்காரில் அலகாபாத் பயணம் ஆனோம். நடுவழியில் காரை நிறுத்தி பகல் உணவு அருந்தினோம். அந்த இடம் அருமையாக இருந்தது. மாலை 6-30 மணிக்கு அலகாபாத் அடைந்தோம்.

அலகாபாத் நகரம் ஆனந்தமாக இருந்தது. நீராடிக் குளித்தோம். கங்கை, யமுனை, சரஸ்வதி - ஆகிய மூன்று நதிகளின் கூட்டுப் பெருக்கு. அலகாபாத்தில் தர்ப்பணம் கொடுத்தேன். அலகாபாத் ஆனந்தப்பவனம் பார்த்தேன். அற்புதக் காட்சிகள். பரவச மூட்டும் அந்த இடம் பார்க்கப் பார்க்கச் சுவையாக இருந்தது. அதற்கு கட்டணம் வசூலித்தார்கள்.

அலகாபாத் ஆனந்த பவனம் என்ற எந்த மூன்று சொற்களால் அந்த இடம் அழைக்கப்பட்டதோ அதற்கு ஆதாரமாக விளங்கியது அம்மாளிகையின் அமைதியான சூழ்நிலை. எத்தனை அறைகள். அத்தனையிலும் தனித்தியே ஒவ்வொரு தலைவருக்கு சிறப்புகள். அண்ணல் காந்தியடிகள் அறையில், அவர் பயன்படுத்திய பொருட்கள். எப்படி இருந்ததோ அவ்விதம் அமைக்கப்பட்டு இருந்தன. அடுத்து மோதிலால் நேருவின் அறை. மோதிலால் பயன்படுத்திய பொருட்கள் அப்படியே வைக்கப்பட்டு இருந்தன. அடுத்த அறை தான் பண்டித ஜவஹர்லால் நேரு பயன்படுத்திய பொருட்கள் தனித்தனியே எடுத்து வைக்கப்பட்டு இருந்தன. இந்திராகாந்தியின் அறையில் அவர் பயன்படுத்திய பொருட்களுடன் அவரும் காந்தியடிகளும் நேருவின் தனித்தனி உருவப்படங்கள், அந்த ஆனந்த பவனம் முழுவதும் மின்னின.

மாலையில் ஹரித்துவார் பயணம். அதற்குள் களைப்பாக இருந்ததால் சற்றே ஓய்வு எடுத்தோம். என்னையும் என் நண்பனையும் விட்டுவிட்டு எல்லோரும் காலி செய்து புறப்பட்டு விட்டார்கள். கண் விழித்தோம். எங்களுக்கு ஒன்றும் புரியாதநிலை. என்ன செய்வது என்று தீர்மானித்தோம். இடையில் சொல்ல முடியாத தவிப்பு. அன்னிய இடம். புரியாத மொழி. எப்படியோ சமாளித்து சைக்கிள் ரிக்ஷாவில் இருவரும் பயணம் ஆகி தடுமாறி தட்டுண்டு எப்படியோ தொடர்வண்டி நிலையம் கண்டு நொந்து வந்து சேர்ந்தோம். எல்லாம் நமச்சிவாய மந்திரத்தின் அருமைதான்.

ஹரித்துவாரம் செல்லும் விரைவு வண்டியில் எல்லோரும் ஏறி அமர்ந்தோம். ஒரு வழியாக ஹரித்துவார் வந்தது. இறங்கி எங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த விடுதிக்குச் சென்று நிம்மதிப் பெருமூச்சு விட்டோம்.

ஹரித்துவாரம் இமயத்தின் அடிவாரத்தில் உள்ள அழகான ஊர். அங்கிருந்து குளிர்ந்த பனி உருகி நீல நிறத்தில் ஆறுகள் பெருக்கெடுத்து ஹரித்துவாரில் ஓடிக் கொண்டு இருந்தது. புனித கங்கை என்று அதற்குப் பெயர். தூய்மையும், நீல நிறமும் அதன் இலக்கணம். அந்தக் குளத்தில் நீலநிறக் கங்கையில் நீராடி மகிழ்ந்தோம். தனித்தனியாகவும் குழுவாகவும் புகைப்படம் எடுத்துக் கொண்டோம். மறக்க முடியாத அந்தக் கங்கை முழுக்கு என் வாழ்நாளில் என்றும் பசுமையாய் நினைவில் நிற்கும். ஹரித்துவாரம் ஆனந்தம் பொங்கிப் பெருகி வரும் இடம்.

பகலில் ஓய்வு எடுத்துக் கொண்டோம். நல்ல குளிர். போர்த்திக் கொள்ள பெரிய போர்வை. எல்லாம் ஓரளவு சுகம் கொடுக்கும் வசதிகள் தான் அங்கு எங்கள் அழுக்கு ஆடைகளை துவைக்கச் சொல்லிப் போட்டோம். அங்கிருந்த பெரும் அனுமன் விக்கிரகம் எங்களின் மனதைக் கவர்ந்தது.

மறுநாள் ஹரித்துவாரத்தில் ஓய்வு. காலையில் எழுதிய கடிதங்களைச் சேர்த்தேன். காரைக்குடி வீட்டிற்குத் தொலைபேசியில் பேசினேன். நல்ல ஓய்வு. இரவு அமிர்தசரஸ் விரைவுத் தொடர் வண்டியில் பயணம் ஆனோம்.

மறுநாள் பகல் 12.30 மணிக்கு அமிர்தசரஸ் வந்தடைந்தோம். குமரன் டிராவல்ஸ் நண்பர்கள் எல்லோருக்கும் ரொட்டி வாங்கிக் கொடுத்தார்கள்.

தனித்தனிக் காரில் வாடகை பேசி தங்ககோயில் **(Golden Temple)** ஜாலியன் வாலாபாக் படுகொலை நடந்த இடம் பார்த்து வாகா **(Vagah)** பார்த்தோம். அந்த வாகா நமது எல்லைக்கும் பாகிஸ்தான் எல்லைக்கும் பொதுவான இடம். ஒவ்வொரு நாளும் மாலை 5 மணிக்கு கொடி மாற்றம் நடக்கும். நாங்களும் அதைப் பார்க்க 5 மணிக்கு சென்றோம். வாகா சென்று அங்கு உள்ள திறந்த வெளி மாளிகையில் இடம் பிடித்து அமர்ந்தோம்.

5 மணிக்கு ஆரம்பம் ஆன கொடிமாற்றல் ஒரு மணி நேரம் நடந்தது. புல்லரிக்கும் காட்சிகள். நெஞ்சை அள்ளும் நிகழ்வுகள் எல்லோருக்கும் ஆவலுடன் பார்த்து மகிழ்ந்தோம். நமது மூவண்ணக்கொடி பளீரென படமென வீசி பறந்தது. கண்கொள்ளா அந்த அருமையை எண்ணி எண்ணி மகிழ்ந்து அமிர்தசரஸ் திரும்பினோம்.

ஜாலியன் வாலாபாக்கில் நமது விடுதலைப்புரட்சி வீரர்களை மொத்தமாகச் சூடுபட்ட இடம். கொள்ளைக்காரண் டயர் நடத்திய துப்பாக்கி ஆட்டம் எல்லாம் நினைவுக்கு வந்தன. சிந்தனையில் அத்தனையும் ஒரு திரைப்படம் போல ஓடியது.

அடுத்து பொற்கோவிலில் குளியல் ஊரணி பிரம்மாண்டமாய் இருந்தன. கண்டு களித்தோம். சீக்கியர் இனிப்பு வழங்கினர்.

எல்லாம் வாகா விருந்துக்கு முன்னர் சாதாரணம் தான். அந்த அளவிற்கு எங்கள் மனதை கவரும் நிகழ்ச்சி அந்த வாகா நிகழ்ச்சிதான். அற்புதமான மறக்க முடியாத இடம்.

இரவு 8 மணிக்கு தொடர்வண்டியில் எங்கள் இருக்கையில் அமர்ந்து கொண்டு துயிலும் நடத்தி மறுநாள் காலை 7-30 மணிக்கு புதுதில்லி வந்து சேர்ந்தோம். புதுதில்லி எல்லாம் நிறைந்த தலைநகர். நமது இந்தியாவின் மிக முக்கிய இடம் என்பதால் அதற்கு அவ்வளவு புனிதமான பெயர்.

தில்லிக்கு எனது வருகை மூன்றாவது முறையாக இருந்தது. முதல்முறை நமது முன்னாள் துணை சபாநாயகர் இலக்குவனுடன் வந்தது. இரண்டாம்முறை அரசாங்க அலுவலராக வந்து குறைதீர் மன்றத்தில் வழக்குத் தொடர்பாக வெற்றிகரமாக முடித்துத் திரும்பியது. அந்த பயணங்களில் ஊர் சுற்ற முடியாததால் தான் மூன்றாம் முறையாக இந்தப் பயணம் அமைந்தது. இனிமையாக இருந்தது. உள்ளபடியே ரசித்துப் பார்த்தேன்.

புதுதில்லி குளிருக்குப் பெயர் போன நேரம். விடுதியில் கீழ் ஒரு மெத்தை, மேல் ஒரு மெத்தை என இரு மெத்தைகள் வழங்கியதால் குளிரைச் சமாளிக்க முடிந்தது. நல்ல சாப்பாடு, நல்ல ஏற்பாடு, முழு ஓய்வு எடுத்தேன். நல்ல தூக்கம். காலைக் காப்பி எல்லோருக்கும் வந்தது. இனித்த சுகம். இதமாக இருந்தது. தில்லியின் குளிரில் மெய்மறந்து உறங்கினேன்.

புதுதில்லியிலிருந்து புறப்பட்டு தனிப் பேருந்தில் மதுரா வந்தோம். மதுராவில் புகழ்பெற்ற லட்சுமிநாராயணன் கோவிலைப் பார்த்தோம். மதுராவின் அழகில் மயங்கினேன். அங்குள்ள லட்சுமி நாராயணன் கோவில் பிரம்மாண்டமானது. கோவில் முழுதும் நடந்து சுற்றிப் பார்த்தேன். கோவிலுக்குப் பிரசித்தம் அந்த லெட்சுமி நாராயணன் திருக்கோயில்தான்.

ஆங்குள்ள கோவில்கள் ஒவ்வொன்றாய்ப் பார்த்து மகிழ்ந்தேன். மதுராவின் அழகிய தோற்றம் மிக ரம்மியமானது. அதனை முழுதும் கண்குளிரப் பார்த்தேன்.

அங்கிருந்து தனிப் பேருந்தில் ஆக்ரா வந்தோம். ஆக்ரா நகரம் என்னைப் பெரிதும் கவர்ந்தது. எங்கு நோக்கிலும் தெரியும் அந்தத் தாஜ்மகால் முகமதியரின் கோட்டைகள் என்னை பெரிதும் கவர்ந்தன. மதிய உணவு ஒரு அனுமன் கோவிலின் விடுதியில் முடித்துக் கொண்டு மெதுவாக எங்கள் பயணத்தைத் தாஜ்மகால் நோக்கி புறப்பட்டோம்.

தாஜ்மகால் இந்தியாவில் உள்ள உலக அதிசயங்களில் ஒன்றாகும், கம்பீரமாக நின்று கொண்டிருந்தது. அதைப் பல்வேறு சமயத்தவர் பார்த்து மகிழ்ந்தனர் என்றால் கம்பீரமாகக் காண முடிந்தது. இருபது ரூபாய் டிக்கட். என்றாலும் மக்கள் வெள்ளம் இந்திய ரூபாயை எண்ணிப் பார்க்கவே இல்லை. அவ்வளவு மாந்தர்களின் கூட்டம் அந்த அதிசயத்தைக் கண்டு களித்தது.

தாஜ்மகால் கோட்டை கம்பீரமாக நின்றது. அந்தக்கோட்டையில் கோயிலில் மகாராணி துயில்கின்ற காட்சி.. அதனை வடிக்க எத்தனை சிற்பிகள் எத்தனை ஆண்டுகள் செலவாயின என்று எவரும் கணக்கிட முடியாத அளவு அந்தக் கோட்டையின் தோற்றம் கம்பீரம்.

தாஜ்மகாலின் முகப்பில் நுழைந்த நாள் அதன் முழுத் தோற்றத்தையும் கண்டு அதிசயித்தேன். அந்தக் கோயிலுக்கு கோட்டைக்கு வந்தவர்கள் திரும்பவே வெகு நேரம் ஆயிற்று. அவ்வளவு நுணுக்கமான சிற்ப வேலைப்பாடு கூடிய பிரம்மாண்டமான கோட்டை. அதைக் கண்டால்தான் முழு அழகை சுவைக்க முடியும். என்னைப் போல எழுத்தில் வடித்தால் அது முழுமையான வடிவம் ஆகாது. அதனால் இதனைப் படிக்கின்ற பெருமக்கள் ஒவ்வொருவரும் நேரில் சென்று தாஜ்மகாலைப் பார்க்க வேண்டுமென்பது எனது கூற்று ஆகும்.

தாஜ்மகாலைப் பார்த்து திரும்பியதும் குமரன் டிராவல்ஸ் நண்பர்களைக் கண்டு எனது ஆசையைத் தெரிவித்தேன். அதிற்கண்ட உண்மைகள் எங்கள் ஒவ்வொருவரின் ஆசையும் ஆகும். தாஜ்மகால் அந்த அளவிற்கு உண்மை நிறைந்த பகுதி என்று தான் உங்களுக்குச் சொல்கிறேன்.

தாஜ்மகாலைப் பார்த்து முடித்ததும், எங்களது கீழை இந்திய பயணம் ஓரளவு நிறைவுக்கு வந்ததாக உணர்ந்தேன். இதனை வடித்துக் கொடுத்த குமரன் டிராவல்ஸ் நிறுவன நண்பர்களை வெகுவாகப் பாராட்டி மகிழ்ந்தேன்.

எனது பயணம் கிராண்ட் டிரங் விரைவு வண்டியில் ஆக்ராவிலிருந்து புறப்பட்டு, சென்னை வந்து சேர்ந்தது. சென்னையில் என் மகன் அன்பு வேங்கடாசலம் சென்னை சென்ட்ரல் வந்திருந்து எங்களை வரவேற்று மகிழ்ந்தான்.

## மேலை இந்தியப் பயணம்

அருமையான இந்தியாவின் 12 ஜோதிர்லிங்க தரிசனம் சுற்றுலா ஏற்பாடு செய்கிறோம் வாருங்கள் என்று குமரன் டிாவல்ஸ் நண்பர்களிடமிருந்து அழைப்பு வந்தது. அந்த அழைப்பினை ஏற்று பயணம் செய்வதென முடிவு செய்தேன்.

அதன்படி பயணமாகி சென்னையிலிருந்து புறப்பட்டு மும்பை விரைவு வண்டியில் மேலை இந்தியச் சுற்றுப் பயணம் முதலில் தொடங்கியது.

முதலில் கீழை இந்தியப் பயணத்தில் எங்கள் பயணம் ஒரிசாவின் பூரி, கோரொாக், மற்றும் கொல்கத்தா துறைமுகம் முதலானவற்றைச் சார்ந்த வங்கக்கடலைப் பற்றியதாகும்.

இப்பொழுது மேலை இந்தியப் பயணத்தில் மும்பை பகுதி குஜராத்தின் துவாரகாபுரி சேர்ந்த இடங்களைச் சார்ந்துள்ள அழகிய அரபிக்கடலைப் பற்றியதாகும். இவ்விதம் கிழக்கே வங்கக்கடலுக்கும் மேற்கே அரபிக் கடலும் நமது இருகட்டுரையிலும் வர்ணிக்கப்படுகின்றன.

எங்கள் தொடர்வண்டி விரைவுப் பயணம் மும்பை நகரை வந்தடைந்தது. எங்களிடம் எலிபண்டா குகையைப் பற்றிச் சொல்லி எலிபண்டா குகை கோவிலைப் பார்க்க இஷ்டமா எனக் கேட்டார்கள். மும்பை வந்து எலிபண்டா குகையை பார்க்காமல் விடலாமா? எனக்குச் சம்மதம் என்றேன்.

எலிபண்டா குகையை பார்க்க எங்களில் ஒரு பிரிவினர் மட்டும் தனியே புறப்பட்டுச் சென்றோம். இந்தியாவின் கோபுரவாசல் (**Gate way of India**) சென்றோம். ஒரு டாக்சி வண்டிக்கு ரூபாய் 100/- வீதம் பேசிக் கொண்டு ஒவ்வொரு வண்டியிலும் மூவர் ஏறிக் கொண்டோம்.

கேட் வே ஆப் இந்தியா என்ற அந்த இடம். அழகும் கம்பீரமும் நிறைந்ததாய் இருந்தது. அதனைச் சுற்றிப் பார்த்துவிட்டு அங்கிருந்து தனித்தனி இந்தியப் படகில் ஏறி எலிபண்டா குகையைக் காணச் சென்றோம்.

அது 15 கிலோ மீட்டர் தூரம் இருக்கிறது அந்த இடம் கடல்வழியாக இருந்ததால் எங்கள் படகு இயந்திரப் படகு கடலில் நீந்தி 15 கிலோமீட்டர் தூரம் கடந்தது. கடலின் இருபுறமும் மும்பை நகரின் அழகான காட்சிகள் அணிவகுத்து நின்றன. சென்றன. எல்லாம் அழகுக்காட்சி.

எலிபண்டா குகை இருந்த அந்த அழகிய தீவினைக் கண்டு மகிழ்ந்தோம். இயந்திரப்படகில் இருந்து இறங்கி தீவில் கால் வைத்ததும் எனது மனம் மிகவும் மகிழ்ச்சி கொண்டது. அந்த இடம் அவ்வளவு ரம்மியமாக இருந்தது. சுனைநீர் அருமையாக இருந்தது. அந்தத் தீவில் எங்களைப் போன்றவர்கள் வருவார்கள் என்று எதிர்பார்த்து எத்தனை சிறு வணிகர்கள் உள்ளனர். அவர்கள் அழகாக அடுக்கி வைத்திருந்த பொருட்களைப் பார்த்துக் கொண்டே சென்றோம். எல்லோரும் கட்டணம் செலுத்திய பிறகு தான், உள்ளே பார்க்க விட்டனர்.

மும்மூர்த்தி சிலை பிரமாண்டமானதாக இருந்தது. அதன் தோற்றம் எவரையும் வியக்க வைக்கும். அதைப் பார்த்துக் கொண்டு மற்றபடி தீவின் சிலைகளைப் பார்த்துக் கொண்டு தீவைச் சுற்றி வந்தோம். எங்கு நோக்கினாலும் பழமையின் அழகும் பொலிவும் தெரிந்தன. வழிபாடு இல்லாத மும்மூர்த்தி சிலைகளைப் போல பல கோவில்கள் அத்தீவில் உள்ளன. எத்தனை நூற்றாண்டுகள் ஆகி இருக்கும் என்று எண்ணிப் பார்த்தேன். பல சிலைகள் செம்மையாக இல்லை. காரணம் வருகின்ற சுற்றுலாப் பயணிகள் கை வேலைதான் அந்தத் திருக்கோலம். அதில் புகைப்படம் எடுத்துக் கொண்டோம். அங்கிருந்து தீவின் பல பகுதி வடிவம் பார்த்த பின்னர் மெல்ல சென்று எங்கள் மோட்டார் படகுகளை அடைந்தோம். அப்போது சிறிய புகை வண்டியில் ஏறி நாங்கள் வந்தோம். எல்லாம் அழகு ததும்பும் காட்சி மீண்டும் கடற்பயணம். 15 கிலோமீட்டர் தூரம் கடந்தோம். பழைய கேட் வே ஆப் இந்தியா வந்தடைந்தோம்.

மும்பையில் யாதவர் வள மனையில் தங்கினோம். பரபரப்பான மும்பை நகரம் எங்களுக்கு நல்ல காட்சிகளை காட்டிக் கொண்டிருந்தது. மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்றனர். வந்தனர். நின்றனர். எங்கும் மக்கள் வெள்ளம் தான். அந்தக் காட்சிகளைக் கண்டபடி எங்கள் குழுவினர் யாதவர் வளமனையில் தங்கினோம்.

மறுநாள் பொழுது விடிந்தது. எல்லோரும் ஒன்றாக காலை 7-30 மணிக்கு தனிப் பேருந்தில் ஏறி நாசிக் நகரம் சென்றோம். அந்நகரிலிருந்து வழியில் மரங்கள் எல்லாம் நிறைய இருந்ததைக் கண்டோம். நாட்டுக் கருவேலி மரம், ஆலமரம், யூகலிப்டஸ், வாகைமரம், என்ற பல்வகை மரங்கள் இருந்தன. சீமைக் கருவேலமரம் அங்கு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

திகம்பரேசுவரர் கோவில் தரிசனம் கிடைத்தது. அதில் சுவாமி தரிசனம். ஏனென்றால் இந்தச் சுற்றுலாவின் நோக்கமே பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களை தரிசிப்பதுதான். அதனால் பதினாறுபேருக்கு மேல அந்தணர்கள் தம் மனைவியருடன் வந்திருந்தனர்.

கோதாவரியின் தொடக்கம் கண்டோம். அதில் அனைவரும் ஆனந்தக் குளியல் நடந்தது. நீர் நிலையைப் பற்றி சொன்னதில் எனக்கு மிகுந்த ஈடுபாடு. அந்த அளவுக்கு அங்கு மகிழ்ச்சியாக இருந்தது. எனினும் சிவனுடைய தோற்றம் கண்டு பரவசப்பட்டேன். நமச்சிவாய என்ற மந்திரச் சொல் அருமை அங்கு தான் எனக்குப் புரிந்தது.

கஜானணன் விடுதியில் அனைவரும் தங்க ஏற்பாடு செய்தனர். அந்த விடுதி மிக அழகானதாக இருந்தது. அங்கிருந்து எல்லாக் கோவில்களையும் தரிசித்து மகிழ்ந்தோம்.

புதுதில்லி, கொல்கத்தா, சென்னை, மும்பை, என்ற நான்கு நகரங்கள் இந்தியாவிற்கு முக்கிய நகரங்கள். அவற்றுள் மும்பை நகரம் மிக அழகானதென்று மகிழ்ச்சியாக ஏற்றுக் கொண்டோம்.

திகம்பரேசுவரர் ஆலயம் கண்டோம். தரிசித்தோம். கோதாவரி ஆற்றில் நீராடி மகிழ்ந்தோம். அங்கு நாசிக் (பஞ்சவடி) என்ற நகரம் பார்த்தோம். அவற்றுள் ஒரு கோவில் நகரத்தார் பராமரிப்பில் உள்ளது. அது முருகன் கோவில். அங்கு லெட்சுமி என்ற செட்டியார் பெண் அலுவல் பார்க்கிறார். அங்கிருந்து புறப்பட்டு முக்கூடல் என்ற பகுதிக்குச் சென்றோம். கோதாவரி, வருணா நதி, அருணா நதி என்ற மூன்று ஆறுகள் முக்கடலாக கலந்து ஒன்று சேர்கின்றன.

சூர்ப்பநகை மூக்கறுபட்ட இடம் என்று ஒரு இடத்தைக் கட்டியிருக்கிறார்கள். அங்கு சூர்ப்பநகை வந்தாளா என்பதே கேள்விக்குறியாக இருக்கிறது. அங்குள்ள அழகிய பர்ண சாலையில் தூரத்தில் லட்சுமிநாரயணன் கோவில் கண்டோம்.

அங்கிருந்து முக்தி தலம் சென்றோம். அது பிரம்மாண்டமான கோவில். பன்னிரண்டு ஜோதிலிங்கமும் காணக் கிடைக்காத காட்சி. வழியில் உள்ள கோவிலில் சேட் தன் தாயார் நினைவாக எழுப்பிய

எங்கள் தொடர்வண்டி விரைவுப் பயணம் மும்பை நகரை வந்தடைந்தது. எங்களிடம் எலிபண்டா குகையைப் பற்றிச் சொல்லி எலிபண்டா குகை கோவிலைப் பார்க்க இஷ்டமா எனக் கேட்டார்கள். மும்பை வந்து எலிபண்டா குகையை பார்க்காமல் விடலாமா? எனக்குச் சம்மதம் என்றேன்.

எலிபண்டா குகையை பார்க்க எங்களில் ஒரு பிரிவினர் மட்டும் தனியே புறப்பட்டுச் சென்றோம். இந்தியாவின் கோபுரவாசல் (Gate way of India) சென்றோம். ஒரு டாக்சி வண்டிக்கு ரூபாய் 100/- வீதம் பேசிக் கொண்டு ஒவ்வொரு வண்டியிலும் மூவர் ஏறிக் கொண்டோம்.

கேட் வே ஆப் இந்தியா என்ற அந்த இடம். அழகும் கம்பீரமும் நிறைந்ததாய் இருந்தது. அதனைச் சுற்றிப் பார்த்துவிட்டு அங்கிருந்து தனித்தனி இந்தியப் படகில் ஏறி எலிபண்டா குகையைக் காணச் சென்றோம்.

அது 15 கிலோ மீட்டர் தூரம் இருக்கிறது அந்த இடம் கடல்வழியாக இருந்ததால் எங்கள் படகு இயந்திரப் படகு கடலில் நீந்தி 15 கிலோமீட்டர் தூரம் கடந்தது. கடலின் இருபுறமும் மும்பை நகரின் அழகான காட்சிகள் அணிவகுத்து நின்றன. சென்றன. எல்லாம் அழகுக்காட்சி.

எலிபண்டா குகை இருந்த அந்த அழகிய தீவினைக் கண்டு மகிழ்ந்தோம். இயந்திரப்படகில் இருந்து இறங்கி தீவில் கால் வைத்ததும் எனது மனம் மிகவும் மகிழ்ச்சி கொண்டது. அந்த இடம் அவ்வளவு ரம்மியமாக இருந்தது. சுனைநீர் அருமையாக இருந்தது. அந்தத் தீவில் எங்களைப் போன்றவர்கள் வருவார்கள் என்று எதிர்பார்த்து எத்தனை சிறு வணிகர்கள் உள்ளனர். அவர்கள் அழகாக அடுக்கி வைத்திருந்த பொருட்களைப் பார்த்துக் கொண்டே சென்றோம். எல்லோரும் கட்டணம் செலுத்திய பிறகு தான், உள்ளே பார்க்க விட்டனர்.

மும்மூர்த்தி சிலை பிரமாண்டமானதாக இருந்தது. அதன் தோற்றம் எவரையும் வியக்க வைக்கும். அதைப் பார்த்துக் கொண்டு மற்றபடி தீவின் சிலைகளைப் பார்த்துக் கொண்டு தீவைச் சுற்றி வந்தோம். எங்கு நோக்கினாலும் பழமையின் அழகும் பொலிவும் தெரிந்தன. வழிபாடு இல்லாத மும்மூர்த்தி சிலைகளைப் போல பல கோவில்கள் அத்தீவில் உள்ளன. எத்தனை நூற்றாண்டுகள் ஆகி இருக்கும் என்று எண்ணிப் பார்த்தேன். பல சிலைகள் செம்மையாக இல்லை. காரணம் வருகின்ற சுற்றுலாப் பயணிகள் கை வேலைதான் அந்தத் திருக்கோலம். அதில் புகைப்படம் எடுத்துக் கொண்டோம். அங்கிருந்து தீவின் பல பகுதி வடிவம் பார்த்த பின்னர் மெல்ல சென்று எங்கள் மோட்டார் படகுகளை அடைந்தோம். அப்போது சிறிய புகை வண்டியில் ஏறி நாங்கள் வந்தோம். எல்லாம் அழகு ததும்பும் காட்சி மீண்டும் கடற்பயணம். 15 கிலோமீட்டர் தூரம் கடந்தோம். பழைய கேட் வே ஆப் இந்தியா வந்தடைந்தோம்.

மும்பையில் யாதவர் வள மனையில் தங்கினோம். பரபரப்பான மும்பை நகரம் எங்களுக்கு நல்ல காட்சிகளை காட்டிக் கொண்டிருந்தது. மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்றனர். வந்தனர். நின்றனர். எங்கும் மக்கள் வெள்ளம் தான். அந்தக் காட்சிகளைக் கண்டபடி எங்கள் குழுவினர் யாதவர் வளமனையில் தங்கினோம்.

மறுநாள் பொழுது விடிந்தது. எல்லோரும் ஒன்றாக காலை 7-30 மணிக்கு தனிப் பேருந்தில் ஏறி நாசிக் நகரம் சென்றோம். அந்நகரிலிருந்து வழியில் மரங்கள் எல்லாம் நிறைய இருந்ததைக் கண்டோம். நாட்டுக் கருவேலி மரம், ஆலமரம், யூகலிப்டஸ், வாகைமரம், என்ற பல்வகை மரங்கள் இருந்தன. சீமைக் கருவேலமரம் அங்கு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

திகம்பரேசுவரர் கோவில் தரிசனம் கிடைத்தது. அதில் சுவாமி தரிசனம். ஏனென்றால் இந்தச் சுற்றுலாவின் நோக்கமே பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களை தரிசிப்பதுதான். அதனால் பதினாறுபேருக்கு மேல அந்தணர்கள் தம் மனைவியருடன் வந்திருந்தனர்.

கோதாவரியின் தொடக்கம் கண்டோம். அதில் அனைவரும் ஆனந்தக் குளியல் நடந்தது. நீர் நிலையைப் பற்றி சொன்னதில் எனக்கு மிகுந்த ஈடுபாடு. அந்த அளவுக்கு அங்கு மகிழ்ச்சியாக இருந்தது. எனினும் சிவனுடைய தோற்றம் கண்டு பரவசப்பட்டேன். நமச்சிவாய என்ற மந்திரச் சொல் அருமை அங்கு தான் எனக்குப் புரிந்தது.

கஜானணன் விடுதியில் அனைவரும் தங்க ஏற்பாடு செய்தனர். அந்த விடுதி மிக அழகானதாக இருந்தது. அங்கிருந்து எல்லாக் கோவில்களையும் தரிசித்து மகிழ்ந்தோம்.

புதுதில்லி, கொல்கத்தா, சென்னை, மும்பை, என்ற நான்கு நகரங்கள் இந்தியாவிற்கு முக்கிய நகரங்கள். அவற்றுள் மும்பை நகரம் மிக அழகானதென்று மகிழ்ச்சியாக ஏற்றுக் கொண்டோம்.

திகம்பரேசுவரர் ஆலயம் கண்டோம். தரிசித்தோம். கோதாவரி ஆற்றில் நீராடி மகிழ்ந்தோம். அங்கு நாசிக் (பஞ்சவடி) என்ற நகரம் பார்த்தோம். அவற்றுள் ஒரு கோவில் நகரத்தார் பராமரிப்பில் உள்ளது. அது முருகன் கோவில். அங்கு லெட்சுமி என்ற செட்டியார் பெண் அலுவல் பார்க்கிறார். அங்கிருந்து புறப்பட்டு முக்கூடல் என்ற பகுதிக்குச் சென்றோம். கோதாவரி, வருணா நதி, அருணா நதி என்ற மூன்று ஆறுகள் முக்கடலாக கலந்து ஒன்று சேர்கின்றன.

சூர்ப்பநகை மூக்கறுபட்ட இடம் என்று ஒரு இடத்தைக் கட்டியிருக்கிறார்கள். அங்கு சூர்ப்பநகை வந்தாளா என்பதே கேள்விக்குறியாக இருக்கிறது. அங்குள்ள அழகிய பர்ண சாலையில் தூரத்தில் லட்சுமிநாரயணன் கோவில் கண்டோம்.

அங்கிருந்து முக்தி தலம் சென்றோம். அது பிரம்மாண்டமான கோவில். பன்னிரண்டு ஜோதிலிங்கமும் காணக் கிடைக்காத காட்சி. வழியில் உள்ள கோவிலில் சேட் தன் தாயார் நினைவாக எழுப்பிய

ஆலயம் கண்டு வியந்தேன். இப்படிப்பட்ட பெரும்கோவிலை எழுப்பி தினசரி ஆறுகால பூஜைகள் நடத்த வசதியாகச் செய்தது மிகப் பாராட்ட படவேண்டிய ஒன்று.

அதை முடித்துக் கொண்டு ஷிர்டி என்ற இடம் சென்றோம் அங்கு உள்ள சாயிபாபா தரிசனம் மிக அருமை. எத்தனை மக்கள்! ஆயிரக்கணக்கில் அங்கு குழுமியிருந்தனர். எல்லோரும் வரிசையாக நின்று அமைதியாக அழகாகத் தரிசனம் செய்கின்ற காட்சி அருமையாக இருந்தது.

அளவற்ற உலகக்காட்சி சாலை **(Musewm)** அணையா நெருப்பு இவையெல்லாம் கண்டோம். ஷிர்டியில் லட்டு வாங்கினோம். இரண்டு மணிநேரம் ஷிர்டியில் அருமையாகக் கழிந்தது. ஷிர்டி மாளிகையில் அமைதியாக உறங்கினோம்.

காலை 7 மணிக்கு சிற்றுணவு முடித்துக் கொண்டு ஷிர்டியிலிருந்து புறப்பட்டு சிங்கணாப்பூர் அடைந்தோம். அங்கே விசேடம் என்னவென்றால் சனீஸ்வரனுக்கு வெறும் கல்லில் (அதுவும் முழு உருவம் எதுவும் இல்லை) எந்தத் தோற்றமும் காண முடியாத நிலையில் நாள் முழுவதும் ஆண்டு முழுவதும் எண்ணெய் முழுக்கு நிகழ்ந்து கொண்டே இருப்பதைப் பார்த்து அதிசயித்தோம்.

சனி சிங்கணாப்பூர் என்ற ஊரில் அந்த அதிசயம்-எந்த வீட்டுக்கு பூட்டும் கிடையாது சாவியும் கிடையாது. அந்த ஊர் அவ்வளவு கட்டுப்பாட்டுடன் எங்கும் அமைதியாக இருக்கும்படி இருக்கிறது.

அங்கிருந்து தனியே பேருந்தில் புறப்பட்டு கிருஷ்ணேசுவரம் அடைந்தோம். கிருஷ்ணேசுவரர் - ஜோதிர்லிங்கம் காட்சி தந்தது அருமை. மதியம் அங்கு விருந்து உண்டோம்.

எல்லோரா குகையைக் காண அனைவரும் புறப்பட்டுச் சென்றோம். எல்லோரா குகை போல பல குகைகள் அங்கு இருந்தன. பல அடுக்குடன் காட்சி தந்த எல்லோரா குகையைக் கண்டு மகிழ்ந்தது அருமையாக இருந்தது. எல்லோரா குகையில் உள்ள பிரம்மாண்டமான சிவலிங்கத்தைக் கண்டு தரிசித்து மகிழ்ந்தோம். அந்தச் சிவலிங்கம் பூசைகள் ஏதும் இன்றி கண்ணுக்கு விருந்தாக இருந்தது. மூன்றடுக்கில் உள்ள மாபெரும் குகை அது. ஒவ்வொரும் அடுக்கும் அற்புதமாக இருந்தது. நாம் நினைக்கமுடியாத அளவுக்கு அவை மாபெரும் காட்சியாக இருந்ததை கண்குளிரக்கண்டு அதிசயித்தேன். இவையெல்லாம் வார்த்தைக்கு அலங்காரமாய் சொல்லப்பட்டவை அல்ல. அவற்றை நேரில் கண்டு மகிழ வாய்ப்பை உண்டாக்கிக் கொள்ள நேயர்களுக்கு எனது வேண்டுகோள்.

இத்தகைய ஜோதிர்லிங்க தரிசனக் காட்சியை குமரன் டிராவல்ஸ் மூத்தமகன் விஜயகுமார் தானே விரும்பி அமைத்ததைப் பாராட்டினேன். விஜயகுமார் என்னிடம் நன்கு புரிந்து கொண்டு நெருங்கிப் பழகினார் நானும் என் நிலையை அவருக்கு விளக்கினோம். கருத்தால் ஒன்றுப்பட்டோம் விஜயகுமாரின் நோக்கமும் என் நோக்கமும் ஒன்றே என்று புரிந்து கொண்டேன்.

சிவலிங்க தரிசனத்தை முடித்துக் கொண்டு எல்லோரும் தனிப்பேருந்தில் அவுரங்கபாத் அடைந்து விடுதியில் தங்கினோம். அந்த அவுரங்கபாத் எங்களுக்கு அமைதியும் ஓய்வும் தந்தது. காலையில் எழுந்தோம். எண்ணெய்க் குளியல் ஆனந்தமாகக் குளித்தேன். மதியம் தக்காளி சாதம் தயிர், உருளைக்கிழங்குக் கறி, இலை அந்த அவுரங்கபாத்தில் அற்புதமாக அமைந்தது. மாலைக் காப்பியும் அங்கு அபூர்வமாக கிடைத்தது.

ஹௌரங்காபாத்திலிருந்து காரைக்குடி தொலைபேசியில் பேசினேன். பேத்தி சுசீலா, மல்லிகாவுடன் பேசினேன். கௌதமன் நலம் விசாரித்தேன்.

ஹௌரங்காபாத்திலிருந்து பரளிக்கு காலை 7 மணிக்குப் புறப்பட்டோம். ஹௌரங்காபாத்திலிருந்து இரண்டாம் தாஜ்மகால் கண்டோம். ஔரங்கசீப் மன்னனின் இரண்டாம் தாரம் இறந்த போது அவர் மகன் எழுப்பியது. அன்னைக்கு ஓர் ஆலயம் அற்புதமாக தாஜ்மகாலை நினைவுபடுத்தும் வகையில் இருந்ததை எல்லோரும் கண்டு இன்புற்றோம்.

அங்கிருந்து நாகநாதர் ஜோதிர்லிங்கம் தரிசனம் கிடைத்தது. அந்த இடம் அவுண்டா என்பதாகும். அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டு பரளி வந்தோம்.

பரளியில் அற்புதமான மாபெரும் ஆலயம் கண்டோம். அருமையான காட்சி தரிசனம். வைத்தியநாதர் ஜோதிர்லிங்கம் அங்கு பார்த்து மகிழ்ந்தோம். பரளியில் அனைவரும் விடுதியில் தங்கினோம்.

பரளியில் இரவு முடித்துக் கொண்டு காலை 5 மணிக்கு குளித்து முடித்து புறப்பட்டோம். எல்லோருக்கும் காப்பி வழங்கினர். பரளியிலிருந்து பீமசங்கர் என்ற அந்த ஜோதிர்லிங்கம் உள்ள ஊர் 300 மைல் தூரம். எங்களுக்கு முன்னரே தெரிவிக்கப்பட்டது. இவ்வளவு அருமையான சுற்றுப் பயணத்திலிருந்து ஜோதிர்லிங்கங்களைக் காண வேண்டுமென்ற அவாவுள்ள நாங்கள் 300 மைல் தூரம் செல்லச் சம்மதித்தோம்.

வழியில் உள்ள சிற்றூரில் தேநீர் குடித்தோம். அந்தத் தேநீர் போல நாங்கள் யாரும் வாழ்க்கையில் குடித்ததில்லை. அவ்வளவு சுவையாக இருந்ததைக் குறிப்பிட வேண்டும். ஒரு வழியாக அந்த பயணத்தை எவ்வளவு தூரம் ஏற்ற இறக்கம் எல்லாம் பார்த்துக் கொண்டு ஒரு வழியாக மாலை 5 மணிக்கு பீமசங்கர் ஆலயம் அடைந்தோம்.

பீமசங்கர் என்ற இடம் மிகமிக உயரம், ஆழம் எல்லாம் உள்ள அற்புத இடம். பீம நதி இங்குதான் உருவாகிறது. அங்கு பீமசங்கர் ஜோதிர்லிங்கத்தைக் கண்டு இன்புற்று தரிசனம் செய்தது எங்களால் மறக்கவே முடியாது. இங்குள்ள சனீஸ்வரனுக்கு காசுபோட்டுத் தரிசித்தோம். ராமர் ஆலயம் அனுமன் கோயில் எல்லாம் தரிசித்தோம். “உமா” என்ற பூனா நங்கை கட்டிய ஆலயம். பீமசங்கர் இங்கு

திகழ்வதைக் கண்டு மகிழ்ந்து பூரித்தோம். இங்குள்ள மலை அடுக்குகள் அருமைபீமசங்கரில் இருந்து புறப்பட்டு வந்த வழியே திரும்பினோம்.

திரும்பும் வழியில் தூரம் அதிகமாக இருந்ததாலும் இருள் நிறைந்திருந்ததாலும் குழுவினர் அங்கு தங்கிச் செல்லலாம். அதற்கு தோதான இடம் தட்டுப்பாடு என்று சொல்ல வழியில் உள்ள விடுதியில் தங்கினோம். காலையில் எழுந்து எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். குலேபகாவ் என்பது அந்த இடத்தின் பெயர்.

குலேபகாவ் இடத்திலிருந்து மும்பை நோக்கி எங்கள் தனிப்பேருந்து பயணம் ஆனது. பூனாவில் வந்து அங்கிருந்து மும்பை புறப்பட்டு மும்பையிலிருந்து தாதர் வழியாக செம்பூர் வந்தோம்.

தாதரில் தங்கினோம். பழைய யாதவ மாளிகையில் மீண்டும் இடம் கிடைத்தது. அது ஒரு அமைதியான இடம். நல்ல வசதி நிறைந்தது. அந்த யாதவ மாளிகையில் இடம் பிடித்து எங்களது உடைமையை வைத்து விட்டு அங்கேயே உணவு எல்லாம் முடித்துக் கொண்டோம்.

தாதர் பகுதியில் சுற்றுப் பயணத்தில் ஒரு சிறிய சுற்றுலா. அந்தச் சுற்றுலாவில் என் கவனம் மும்பையில் நடந்த கிரிக்கெட் விளையாட்டைப் பற்றிய செய்தி. கிரிக்கெட் காண சென்றேன். ஒரு மராட்டிய வீடு தான் கிடைத்தது. அதில் என் தேவையைச் சொல்லி இடம் கேட்டேன். வீட்டுப் பையன் என்னை உள்ளே அழைத்துச் சென்றான். அங்கு மராட்டியப் பெண்கள் அதிகம் இருந்தன. எனக்கு கூச்சமாக இருந்தது. அதே சமயம் அங்குள்ள மராட்டியப் பெண்கள் என்னை அப்பா என்றழைத்தது எனக்கு இதமாக இருந்தது.

மும்பையில் காலை 5 மணிக்கு எங்களுக்கு தனிப் பேருந்து புறப்பட்டது. வழிநெடுக சிற்றூர்களைக் கடந்து சென்று மாலை 5 மணிக்கு எங்கள் பேருந்து கோமதி துவாரகா அடைந்தது. கடல்நீர் ஆட வேண்டுமென்று ஆசைப்பட்டேன். அங்கே எனக்குத் துணையாக வந்து சேர்ந்த நண்பர் அம்மையப்பன் என்பவர் வந்தார்.

அம்மையப்பனைப் பற்றி சிறிது சொல்ல வேண்டும். அவரும் அவர் மனைவி அகிலாவும் நல்ல மனிதர்கள். அன்பு உள்ளவர்கள். திருச்சி உறையூரைச் சேர்ந்தவர்கள். அம்மையப்பன் இதமாகப் பழகக் கூடியவர். இனிய நண்பர். அவரும் நானும் குளிக்கச் சென்றோம்.

கடல்நீர் அதிகமாக இருந்தது. கரையில் உள்ள பகுதியில் இறங்கி கடல் நீரில் குளித்தோம். அரபிக் கடலில் குளித்ததால் ஆனந்தம் அடைந்தேன். அங்கு நானும் அம்மையப்பனும் கடலில் நீராடி விட்டு கரை ஏரி மெல்ல எங்கள் விடுதிக்கு வந்து உடை மாற்றினோம். அது ஒரு சுகமான அனுபவம்.

கோமதி துவாரகைக் கோயிலில் கூட்டம் அதிகமாக இருந்தது. அங்கு தரிசனம் செய்தோம். இனிய தரிசனம். இன்பமான வாய்ப்பு. இறைவனை நினைத்து அத்திருக்கோயிலில் நன்கு வழிபட்டேன். இரவு உணவு எல்லோருக்கும் வழங்கினர். துயிலில் ஆழ்ந்தோம். காலை 5 மணிக்கு கோமதி துவாரகையிலிருந்து புறப்பட்டு தாருகாவனம் அடைந்தோம். தாருகாவனத்தில் உள்ள நாகேஸ்வரர் என்ற ஜோதிர்லிங்கத்தைத் தரிசித்தோம். சிவன் தோற்றம் மாபெரும் அளவில் பிரம்மாண்டமாய் இருந்ததைக் கண்டு பரவசப்பட்டோம்.

தாருகாவனத்திலிருந்து கோமதி துவாரகை வந்தோம். கடல் நடுவே உள்ள அந்தத் தீவை கடக்க படகு சவாரி எல்லோருக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. அப்படகில் ஏறி கல்யாண துவாரகை அடைந்தோம்.

குசேலர் கண்ணனுக்கு அவல் வழங்கிய இடம். அதனை நன்கு சுற்றிப் பார்த்தோம். அதன் பின்னர் ருக்மணியைத் திருமணம் செய்த அந்தக் கல்யாண துவாரகையைப் பார்த்து விட்டு படகு ஏறி கோமதி துவாரகையை அடைந்தோம். அங்கு எல்லோருக்கும் சிற்றுணவு கிடைத்தது.

காலை 5 மணிக்கு கோமதி துவாரகையைப் பிரிந்து நாங்கள் சோமநாத் நோக்கிப் பயணமானோம். எங்கள் தனிப்பேருந்தில் வழியில் இளங்காலைப் பொழுதில் எல்லோரும் மலைஏறி வரசித்தி மாதா ஆலயம் பார்த்தோம். மூன்று தேவதைகளின் தோற்றம் மிக அருமையாக இருந்தது.

கண்ணன் சிவலிங்கத்தை வணங்கிய மூலதுவாரகையைப் பார்த்தோம். எங்கும் சிவன் பெருமை அங்கு மேலோங்கி இருந்தது. கண்குளிரக் கண்டேன். மீண்டும் அங்கு வரமுடியுமா என்ற எண்ணம் எனக்கு மேலோங்கியது.

பின்னர் எங்கள் பேருந்து மெல்ல போர்பந்தர் வந்தடைந்து போர் பந்தரில் இறங்கியது. எனக்கு வாழ்க்கையில் உள்ள மிகப்பெரும் கனவு நிறைவேறிய உணர்வு பிறந்தது. இந்தச் சுற்றுப்பயணத்தைப் பார்க்கும்போது ஒருமுறை போர்பந்தர் போல காந்தி பிறந்த இல்லம் ஒருமுறை பார்த்து வர வேண்டும் என்ற எண்ணம் எனக்கு நிறைய இருந்தது. அது நிறைவேறுவதை உணர்ந்து மகிழ்ந்தேன்.

போர்பந்தரில் மகான் காந்தியடிகள் பிறந்த இல்லம் கண்டு இன்புற்றேன். காந்தியடிகள் வாழ்ந்த இடம், பிறந்த இடம் எனக்கு தனித்தனியே காட்டினார்கள். அங்குள்ள பயணிகள் கருத்துப் பெட்டகத்தில் எனது வருகையைத் தமிழில் எழுதிப் பதிவு செய்தேன்.

போர்பந்தரில் மகான் காந்தியடிகள் பிறந்த இடத்தை முத்தமிட்டு வணங்கினேன். வாழ்வில் மறக்க முடியாத நாள் அல்லவா அது? அடுத்தாற்போல் கண்ணனை வேடன் அம்பால் எய்து கொன்ற இடம் பார்த்தோம். அடுத்த இடம் முக்தி துவாரகை என்ற கோயில். முக்தி துவாரகையில் வழிபாடு செய்தோம். எங்கும் ஆனந்தமாக இருந்தது.

அடுத்தாற்போல் எங்கள் தனிப்பேருந்து சோமநாத் என்ற ஊர் நோக்கிச் சென்றது. எனக்குச் சிறுவயதில் பள்ளிப் பருவத்தில் இப்படி சோமநாத் போன்ற பகுதிக்குச் சென்று பார்க்க வேண்டுமென்ற கனவு இருந்தது. அந்தக் கனவு இப்பொழுது நிறைவு அடைந்தது.

சோமநாத் என்ற இடம் அழகிய கடற்கரை அற்புதமான ஊர். அங்கு இரவு தங்க வேண்டும் என்று ஏற்பாடு. எல்லோருக்கும் உணவு ஏற்பாடாகி இருந்தது. இதற்கு இடையில் சோமநாத் கோயில் பார்த்து வர வேண்டுமென்று அனைவரும் புறப்பட்டனர். அந்த அமைதியான மாலைப் பொழுதில் அந்தக் கம்பீரமான சோமநாத் கோயிலைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் என்னுள் பரவசம் ஏற்படுத்தியது.

சோம்நாத்தின் அந்த அழகிய மாபெரும் கோவிலைக் கட்டியிருக்க வேண்டும் என்ற எண்ணம் அன்றைய துணைப்பிரதமர் சர்தார் வல்லபாய் படேயின் சிந்தனையில் ஏற்பட்டது. பழம்பெரும் கோவிலான சோம்நாத் ஆலயம் அந்நியன் படையெடுப்பால் அழிக்கப்பட்டு சின்னாபின்னம் ஆக்கப்பட்டுக் கிடந்தது. இப்பெருங்கோவிலை அழகிய முறையில் பலகோடி செலவில் பிரம்மாண்டமாய் சீர் அமைக்க வேண்டும் என்ற திட்டம் வகுத்துச் சர்தார் வல்லபாய் படேல் செயலாக்கினார். அத்திட்டத்தின் மொத்த வடிவம்தான் நாம்காணும் சோம்நாத் பெருங்கோவில். அதைக் கண்டு பிரமித்து வணங்கிப் பரவசப்பட்டேன். சோம்நாத் கோவில் அளவற்ற பொலிவுடன் கடற்கரையில் கம்பீரமாக எழுந்து நின்றது.

சோம்நாத் கோயிலின் உள்ளே ஏறி மெதுவாகச் சென்று இறைவனையும் இறைவியையும் தரிசித்து மெய்மறந்து நின்றேன். அந்தக் கம்பீரமான கோயிலை யாரும் இடிக்கமுடியாது. அசைக்க முடியாது. கடற்கரையில் எழுந்து நிற்கின்ற இதய சிம்மாசனம் அந்த சோம்நாத் கோவில்.

சோம்நாத்தில் உணவுமுடித்து அங்குள்ள விடுதியில் தங்கி மகிழ்ந்தோம். எல்லோருக்கும் சோம்நாத் கோவிலின் கம்பீரம் கண்ணுக்கு விருந்தாய் இருந்தது.

மராட்டியம், குஜராத், மத்தியப்பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்களின் 12 ஜோதிர்லிங்கங்களைத் தரிசித்து, 9 நவதுர்க்கை பார்த்துக்கொண்டு நர்மதை ஆற்றில் நீராடி வரவேண்டும் என்பதே இச்சுற்றுலாவின் நோக்கம். இதைக் குமரன் டிராவல்ஸ் விஜயகுமார் எங்களிடம் நினைவு ஊட்டினார்.

மறுநாள் அதிகாலையில் காலை 5 மணிக்கு சோம்நாத்திலிருந்து புறப்பட்டு 11 மணியளவில் ராஜ்கோட் வந்து சேர்ந்தோம். ராஜ்கோட் நகரம் எங்களை வரவேற்றது. ராஜ்கோட்டில் இருந்து பகல் 2 மணி அளவில், தனிப்பேருந்தில் உஜ்ஜயினியை நோக்கிப் புறப்பட்டோம். அதிகாலை 4-30 க்கு தனிப்பேருந்து எங்களை ஏற்றிக் கொண்டு உஜ்ஜயினி வந்து சேர்ந்தது. ஓய்வு எடுத்துக் கொண்டோம்.

காலை 7-30 மணிக்கு தனிப்பேருந்தில் உஜ்ஜயினியை விட்டுப்புறப்பட்டு மத்தியப் பிரதேசத்தின் தலைநகரம் இந்தூர் வழியாக நர்மதை நதியை வந்தடைந்தோம். நர்மதை இந்தியாவின் ஜீவநதி என்றும் எப்பொழுதும் வற்றாமல் ஓடிக் கொண்டிருக்கின்ற ஜீவநதி. அதில் நீராடி மகிழ வேண்டும் என்றும் திட்டமிட்டார் குமரன் டிராவல்ஸ் விஜயகுமார்.

நர்மதை நதியின் இருகரையிலும் இரண்டு ஜோதிர்லிங்க கோயில்கள் கம்பீரமாக நின்கின்றன. அதில் நீராடி மகிழ்ந்து படகு சவாரி செய்து ஒரு கரையிலிருந்து மறுகரையைக் கடந்தோம். இனிய அனுபவம் இன்பமான ஏற்பாடுகள். இதற்கு ஈடும் இல்லை இணையும் இல்லை.

நர்மதை நதியில் குளிர்ந்த நீரில் மதிய வெய்யிலில் குளிப்பது என் மகிழ்ச்சியை மேலும் மேலும் பெருக்கியது. அதிலும் நர்மதை நதி எங்களை புளகாங்கிதம் அடையச் செய்தது.

நர்மதை நதியை விட்டுப் புறப்பட்டு மீண்டும் உஜ்ஜயினி நகரம் வந்து சேர்ந்தோம். உஜ்ஜயினியில் ஒரு விடுதியில் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டோம். அது ஒரு பிரம்மாண்டமான விடுதி. அங்கு நாங்கள் தங்குவது என்பது முக்கிய விஷயம்.

உஜ்ஜயினியில் நண்பர்கள் தங்கள் தேவைகளை எல்லாம் முடித்துக் கொண்டனர். என்னைப் போன்றவர்கள் ஓய்வு எடுத்துக் கொண்டு அங்குள்ள அழகிய விடுதியின் நிகழ்வுகளைக் கண்டு மகிழ்ந்தோம்.

உஜ்ஜயினி ஒரு பெருநகரம் மட்டுமல்ல கோவில்களின் சொர்க்கமாகப் பேசப்படுகிறது. அங்கே அவரவர் விருப்பப்படி அவர்களுக்கு ஏற்ற கோயில்களில் வழிபாடு செய்தோம். மொத்தத்தில் உஜ்ஜயினி எங்கள் உள்ளம் கவர்ந்த ஊர் என்பதில் ஐயமில்லை.

மத்தியப்பிரதேசத்தின் முக்கிய நகரமான உஜ்ஜயினி நகரில் எங்கள் ஓய்வை முடித்துக் கொண்டு தென்நாடு செல்வதென்று அதற்கான வண்டியைத் தேர்ந்தெடுத்து வெளிவந்தோம்.

உஜ்ஜயினி நகரின் தொடர்வண்டி நிலையத்தில் எங்களுடைய விரைவு வண்டியில் எல்லோரும் ஏறி சொந்த ஊருக்குத் திரும்பினோம். எங்களை மகிழ்ச்சியுடன் அழைத்து வந்தவர் குமரன் டிராவல்ஸ் விஜயகுமார் என்பது குறிப்பிடத்தக்கது.

உஜ்ஜயினி நிலையத்திலிருந்து எங்களை ஏற்றிக்கொண்டு விரைவுத் தொடர் வண்டி புறப்பட்டது. எல்லோரும் விரைவு வண்டியில் வேண்டிய உணவை வேளைதவறாமல் தந்து உதவினர்.

விரைவு தொடர்பாதை எங்களை ஏற்றிக்கொண்டு சென்னை சென்ட்ரல் நிலையம் வந்தடைந்தது. என்னை வரவேற்க அன்புடன் அவர் மனைவி அல்லி, பேரன் முகிலன் முதலானோர் வந்திருந்தனர்.

பகல் 11 மணி அளவில் வந்து சேர்ந்த விரைவு தொடர் வண்டி அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது. அனைவருடன் சொல்லிக் கொண்டு நானும் அன்பு, அல்லி, முகிலன் முதலானோரும் எங்கள் சென்னை இல்லம் நோக்கிச் சென்றோம்.

# புதுக்கோட்டை to தேவகோட்டை

அது ஒரு மாலை நேரம். அழகிய குதிரைகள் பூட்டிய சாரட்டு வண்டியில் புதுக்கோட்டை மன்னர் தொண்டைமான் அரண்மனையிலிருந்து மேற்கு நோக்கி புறப்பட்டார். சாரட்டு வண்டியில் புதுக்கோட்டை மன்னர் தொண்டைமானும் திவான் கோபால அய்யரும் அமர்ந்துள்ளனர். வண்டி திருவேட்பூர் (திருவப்பூர்) செட்டித் தெருவில் உள்ள அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் வீட்டுக்கு வந்து நிற்கிறது.

அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் வீடு களைகட்டி உள்ளது. ஊர்ப் பெரியவர்கள் வந்து குழுமியுள்ளனர். அமைச்சர் செட்டியார் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தபடி சாரட்டு வண்டியிலிருந்து மன்னர் தொண்டைமானும் உடன் திவான் கோபால அய்யரும் இறங்குகின்றனர். ஊர்ப்பெருமக்கள் அனைவரும் எழுந்து மன்னரை வணங்குகின்றனர். அமைச்சர் செட்டியாரும் அவரது மனைவியாரும் மன்னர் தொண்டைமானை வணங்கி வரவேற்று வீட்டின் உள்ளே அழைத்துச் செல்கின்றனர்.

அன்று செட்டியார் நல்லடைக்கலம் வீட்டில் முக்கிய நாளாக இருக்கிறது. செட்டியாரின் மகள் செல்வி பூப்புனித நீராட்டு விழா முதலாண்டு நிறைவு விழா நடக்க இருக்கிறது.

நல்லடைக்கலம் செட்டியாரின் மகளை நன்கு அலங்கரித்து புனித நீராட்டுகின்றனர். நீராடி முடித்ததும் அணிகலன்கள் பூட்டி சீவிச் சிங்காரித்து மணமகள் போல அலங்கரித்து உள்ளே அழைத்து வருகின்றனர். மகளின் தோற்றம் மிக அழகு. பேரழகு. சிவப்பு நிறத்திற்கேற்ற பட்டுப்புடவைகள், மன்னருக்கு அமைச்சர் என்ற முறையில் அணிகலன்களின் அழகு, மகளின் எழில் தோற்றத்தை மேலும் அழகூட்டியது. அலங்கரித்த அழகு மகளை அழைத்துக் கொண்டு செட்டியாரின் மனைவி உடன் வர மகள் அனைவருக்கும் வணக்கம் கூறுகிறாள்.

அழகு மகளின் வருகை, மன்னர் தொண்டைமானின் மனதை மயக்குகிறது. அந்த இளந்தேவதையை கண்கள் இரண்டிலும் அழகு பார்த்து மயங்கி பரவசப்பட்டு மன்னன் தொண்டைமான் நிலைதடுமாறி நிற்கிறார். அவரின் அழகுத் தடுமாற்றம் கூடியிருந்த மக்களின் முன்னிலையினையும் மறக்கச் செய்தது.

மகளின் நிலையை அறியாமல் நல்லடைக்கலம் செட்டியார் உள்ளே அழைத்துச் செல்கிறார். விருந்து நடக்கிறது. திவான் கோபால அய்யர் விருந்தில் மூழ்கிறார். மன்னர் தொண்டைமான் விருந்தைத் தொட்டுப்பார்த்தவர் முழுதும் உண்ணாமல் செட்டியார் மகள் செல்வதையே நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கிறார்.

ஊர்ப் பெரியவர்கள் மகிழ்ச்சியுடன் ஒருவர்க்கு ஒருவர் சொல்லிக் கொண்டு தம்தம் இல்லம் ஏகுகின்றனர். திவான் கோபால அய்யர், அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியாரிடம் சொல்லிக் கொண்டு புறப்படுகின்றார். புதுக்கோட்டை மன்னன் தொண்டைமானும் எதுவும் பேசத்தோன்றவில்லை. அமைச்சரிடம் ஏதோ சொல்ல நினைத்திருந்தார். ஆனால் எதுவும் வாய் விடவில்லை. மன்னரும் திவானும் சாரட்டு வண்டியில் ஏறிப் புறப்படுகின்றனர்.

நாட்கள் நகர்கின்றன. அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் தமது அன்றாடக் கடமைகளை முடித்துக் கொண்டு நித்தமுத்தி ஊரணியில் நீராடி கரையில் எழுந்தருளியுள்ள விநாயகப்பெருமானைத் தரிசித்து இல்லத்தில் உள்ளார்.

வழக்கம்போல் மன்னன் அரண்மனையிலிருந்து அமைச்சர் செட்டியாரை அழைக்க இரட்டைக்குதிரை பூட்டிய சாரட்டு வண்டி வீட்டின் முன் வந்து நிற்கிறது.

அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியாரும் அவரது மனைவி ஆச்சியும் உள்ளே ஏதோ பேசிக் கொண்டு இருக்கின்றனர். பேச்சு இதமாக இருக்கிறது.

ஆச்சி: என்னங்க! மகளின் வயது நாளுக்கு நாள் ஏறிக் கொண்டே போகிறது. பூப்புனித நீர் இரண்டு ஆண்டுக்கும் ஊற்றிவிட்டோம்.

செட்டியார்: என்ன எனக்குத் தெரியாதா? நம்மகளின் அழகுத் தோற்றத்திற்கு எத்தனையோ வரன்கள் காத்து இருக்கின்றனர்.

ஆச்சி : அப்படியானால் நல்ல வரனை பார்த்து முடிவு செய்ய வேண்டியது தானே!

செட்டியார் : எனக்குத் தெரியாதா? எல்லாம் கூடி வரவேண்டாமா? பார்த்துக் கொண்டு தான் இருக்கிறேன்! வரட்டுமா?

இவ்வாறு அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் மனைவியிடம் சொல்லிவிட்டு சாரட்டு வண்டியில் ஏறிக் கொள்கின்றார். சாராட்டு வண்டி அரண்மனை நோக்கிப் புறப்படுகிறது. வழியில் திருவேடபூர் (திருவப்பூர்) முத்துமாரியம்மன் கோவிலில் வழிபாடு செய்துவிட்டு, அமைச்சர் நல்லடைக்கலம் அரண்மனை நோக்கி சாரட்டு வண்டியில் புறப்படுகின்றார்.

புதுக்கோட்டை அரண்மனை மன்னர் தொண்டைமானின் மனச்சஞ்சலங்களைக் கண்டு நிற்கிறது. மன்னர் அன்றாடம் அலுவலகங்களைக் கவனிக்காமல் அந்தப்புரத்தில் தனியாக ஏதோ சிந்தனையில் அமர்ந்துள்ளார்.

அமைச்சர் செட்டியார் அன்றாட அலுவல்களில் ஆழ்ந்து விடுகின்றார். நேரம் போய்க் கொண்டிருக்கிறது. புதுக்கோட்டை மன்னர் தொண்டைமான் அரியணையிலிருந்து வேற்று நபர் எவரும் வராமல் வெறுமே இருக்கிறது. ஆனால் அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் தம் அலுவல்களை முடித்துக் கொண்டு சிப்பாய் ஒருவனை அழைத்து சமஸ்தான ஜோதிடரைக் கூப்பிட்டு வரச் சொல்கிறார்.

சிப்பாய் உடனடியாய்ச் சென்று அரண்மனை ஜோதிடர் உமாமகேசுவர அய்யரைக் கையோடு அழைத்து வருகிறார்.

அமைச்சர் : உமாமகேசுவரரே. வாரும் உம்மை அழைத்த காரணம்...

சோதிடர் : அமைச்சர் பெருந்தகையே. உமது அழைப்பை ஏற்று ஓடோடி வந்துள்ளேன். காரணம் சொன்னால் தானே புரியும்.

அமைச்சர்
நல்லடைக்கலம்
செட்டியார் : ஜோதிடரே நமது செல்வமகள் திருமணம் பற்றிப் பேசி முடிவு செய்ய வேண்டும்?

சோதிடர் : அப்படியா, மிக்க மகிழ்ச்சி.

அமைச்சர் : ஆம். நமக்குத் தோதாக நல்ல இடமாகப் பார்த்துப் பேச வேண்டும். அதற்கு நாள்பார்த்து மேலே நடக்க வேண்டியவைகளை எல்லாம் கூற வேண்டும். அதற்காகத்தான்.

சோதிடர் : நல்லது. அப்படியே நடக்கட்டும். தாங்கள் குறிப்புக் கொடுத்தால் எல்லாம் நல்லவிதமாக நடக்க நான் ஆவன செய்யக் காத்திருக்கிறேன்.

உள்ளே சேவகன் ஒருவன் மன்னர் தொண்டைமான் அவசரமாக அமைச்சரை அழைப்பதாகக் கூறுகிறான். அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் அப்படியா என்று கூறி மன்னரைப் பார்க்க உள் அந்தப்புரம் நோக்கிச் செல்கிறார்.

புதுக்கோட்டை
மன்னர்
தொண்டைமான்: அமைச்சர் அவர்களே. வாருங்கள். வாருங்கள்.

அமைச்சர்: வணக்கம் மன்னா. என்னை அழைக்கக் காரணம் அறியலாமா?

மன்னர் : அமைச்சரே! எல்லாம் நல்ல விசயம் தான்.

அமைச்சர்: மன்னரே. தாங்கள் அழைத்த காரணம் என்ன?

மன்னர்: அமைச்சரே. தங்கள் மகளின் திருமண ஏற்பாட்டைப்பற்றி அறிய விரும்புகிறீர்கள்.

அமைச்சர்: ஆம். ஆம். அதனால்தான் எனக்கு அவசரகாரியம்.

மன்னர்: அமைச்சரே. தங்கள் அருமை மகளை ஏன் வெளியே உள்ள மாப்பிள்ளைக்குத் திருமணம் செய்ய ஆசைப்படுகிறீர்கள்.

அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார்: மன்னவா. என்ன இது புதுக்கேள்வி. என் மகளுக்கு ஏற்ற வரனைத் தேர்வு செய்யத்தான் ஜோதிடரிடம் பேசிக் கொண்டிருந்தேன்.

மன்னர் தொண்டைமான்: ஆம். ஆம். அதனால்தான் நான் என் கருத்தைச் சொல்ல விரும்புகிறேன்.

அமைச்சர்: என்ன மன்னரே. என்ன உங்கள் கருத்து?

மன்னர் தொண்டைமான்: அமைச்சர் செட்டியாரின் அழகு மகளுக்கு வேறு இடத்தில் வரன் பார்க்க வேண்டாம். நான் நல்ல இடமாகப் பார்த்து வைத்துவிட்டேன். ஆம். நான்தான் அந்த வரன். சம்மதமா செட்டியார். சொல்லுங்கள்?

அமைச்சர்: (சற்று மயங்கிய நிலையில்) எதுவும் வாய் பேசாமல் நிற்கிறார். ஒன்றும் புரியாதநிலை என்ன பதில் சொல்வது என்று விளங்கவில்லை. பதில் பேசாமல் நின்றார்.

மன்னர்: செட்டியாருக்கு தன் மகளை எனக்குக் கொடுக்க விருப்பமில்லையா? (சினத்துடன் கேட்கிறார்)

அமைச்சர்: நல்லடைக்கலம் செட்டியார், வாய் பேசாது நிற்கிறார். எதுவும் புரியாத நிலை.

மன்னர் தொண்டைமான்: மறுநாள் இரவு அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் இல்லம் வருவதாகச் செல்கிறார். சொல்லி தான் மட்டும் எழுந்து சென்று விடுகிறார்.

**அமைச்சர்: நல்லடைக்கலம் செட்டியார் அமைதியாகத் திரும்பிக் கொண்டிருக்கிறார். அவர் புரத்தில் அமைதியாக இருந்தாலும் அகத்தில் ஆயிரமாயிரம் பேரிடிகள் இடித்துக் கொண்டுதான் இருந்தன.**

அது மன்னராட்சிக் காலம். இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஆங்கில ஆட்சி அமையாத நிலையில், மன்னர்கள் எடுத்த முடிவு எதுவாக இருப்பினும் அதை மேல் முறையீடு செய்ய எந்த மன்றமும் இல்லை. சட்டமும் இல்லை. ஆள்கிறவன் செய்யும் முடிவே அது. எந்த விஷயமாக இருப்பினும், அந்த முடிவுக்கு மேல் எதுவும் செய்ய முடியாது. எனவே தான் நல்லடைக்கலம் செட்டியார் மன்னர் தொண்டைமான் செய்யும் முடிவை மறுக்கமுடியாத நிலையில் தான் தன் குடும்பத்துடன் ஐம்பது மைலில் உள்ள தேவகோட்டை ஜமீன்தாரை அண்டிப் பிழைப்பு நடத்துவது என்று முடிவு செய்து புறப்படத்தயாராகிக் கொண்டிருக்கிறார்.

அமைச்சர் வீடு திரும்ப எண்ணிக் கொண்டு தமது இருக்கையிலிருந்து வெளியே வரத்தயாராகிக் கொண்டிருக்கும் வேளையில் அவசரமான இரட்டைக் குதிரை பூட்டிய சாரட்டு வண்டி வந்து நிற்கிறது. சேவகன் இதமாக அமைச்சரை அழைத்து இருக்கையில் அமர வைத்து அமைச்சர் இல்லம் நோக்கிப் புறப்படுகிறான். அமைச்சர் சிந்தனையிலிருந்து மீளவே இல்லை.

செட்டித்தெருவிற்கு சாரட்டு வண்டி வந்து நிற்கிறது. அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார் மெதுவாக இறங்கி தன் வீட்டுக்குள் செல்கிறார்.

அமைச்சர் வீடு வந்ததும் வழக்கம்போல் தன் மனைவி ஆச்சி வந்து உள்ளே அழைத்துச் செல்கிறார். வீட்டுக்குள்ளே அமைச்சரின் அருமை மகள் வரவேற்க வந்து கொண்டிருக்கிறாள்.

அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியார்:
மகளே. செல்வ மகளே மோசம் போய்விட்டேன். என் செய்வேன். இறைவா இது என்ன சோதனை (என்று கூறிவிட்டு மயக்கமான நிலையில் உள்ளார்)

ஆச்சி: என்னங்க. என்ன நடந்தது கூறுங்கள்.

அமைச்சர் செட்டியார் :
என்ன ஆச்சி. என் சொல்வேன். நமது மகளை மன்னன் தொண்டைமான் தனக்கு கேட்கிறார்.

ஆச்சி: ஆ. ஆ. என்ன செய்தி. இப்படியும் நடக்குமா? தொண்டைமானுக்குப் புத்தி இல்லையா? ஐயோ என் செய்வோம்.

அமைச்சரின் மகள் செல்வியின் செவிகளில் இது நாராசமாகப் பாய்கிறது. மயங்கி நிற்கும் பெற்றோர்களைப் பார்த்துக் கூறுகிறாள்.

மகள்: அப்பா, அம்மா. இருவரும் ஏன் மயங்கி நிற்கிறீர்கள். பிரச்சனை எனக்கா, உங்களுக்கா? எதுவும் வரட்டும் என்று பார்த்துக்

கொண்டுதான் இருக்கிறேன். என் முடிவு தெரியாமல் மன்னர் வாய்விட்டு விட்டாரோ. நான் தெளிவாகச் சொல்கிறேன். மன்னர் என் அழகைப் பார்த்துக் கேட்டார். அதற்கு என் பதில். நான் என்னை அவரிடம் ஒப்படைக்கப் போவதில்லை. என் உயிர் இந்த வீட்டிலேயே முடியப் போகிறது. அதற்கு நேரமும் வந்துவிட்டது. என் முடிவைச் செயலாக்க வேண்டும், செய்வீர்களா அப்பா, அம்மா.

செட்டியாரும் ஆச்சியும் கண்கள் குளமாக மகளைக் கண்டு வாய்ப் பேசமுடியாமல் நிற்கின்றார்கள்.

மகள்: அப்பா, அம்மா இருவரும் மனதைத் தேற்றிக் கொள்ளுங்கள். என் முடிவும் தெளிவாக இருக்கிறது. என் அழகு நகைகள் இதோ என் ஆசை நாய்க்குப் பூட்டுகிறேன். என் உயிர் இந்த கம்பந்தாழியில் முடியப் போகிறது. அதற்கு அனுமதித் தாருங்கள்.

செட்டியாரும் ஆச்சியும் திகைத்துப்போய் நிற்கின்றனர். பதில் எதுவும் வரவில்லை, காரணம் வேறு பதிலுக்கு அங்கே வேலை இல்லை. தேவையும் இல்லை.

எல்லாமும் வேகமாக நடக்கின்றது. மன்னர் தொண்டைமான் எவ்வளவு மோசமானவர் என்பது எல்லாருக்கும் தெரியும். தனக்குச் சாதகமாக அவர் எதையும் செய்வார் என்பது புரியும். காலம் அப்படிப்பட்ட சூழ்நிலையில் இருந்ததுதான் காரணம்.

நல்லடைக்கலம் செட்டியார் குழப்பத்திற்கு இடையில் நல்ல விதமாகச் சிந்தித்து தான் அடுத்துச் செய்ய வேண்டிய காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினார். மேலே என்ன செய்ய வேண்டும் என்று சிந்திக்கத் தொடங்கினார்.

தன் மகன் பத்து வயது நிரம்பாத பாலகன், நாச்சியப்பனை, அழைத்து நடந்த விஷயங்களைச் சொல்லி அவனிடம் உள்ள அன்பை வெளிப்படுத்தினார்.

இரவெல்லாம் ஆச்சிக்கும் அருமை மகளுக்கும் இடையே நடந்த வேதனைகள் அதிகம். சோதனைகள் ஏராளம். எல்லாவற்றையும் மகள் கேட்டு தன் தாயாரின் மனக்கவலைக்கு மருந்தாக விளங்கினார்.

மறுநாள் பொழுது விடிந்தது. எல்லாவற்றையும் அருள்மிகு முத்துமாரியம்மன் மேல் போட்டுவிட்டு தன் அலுவல்களை வேகமாகச் செய்யத் தொடங்கினார் நல்லடைக்கலம் செட்டியார்.

திருவேட்பூர் செட்டித் தெருவில் உள்ள தனது உடைமைகள் எல்லாவற்றையும் எடுத்துப் பார்த்து அதில் என்ன கொண்டு செல்ல வேண்டுமோ கொண்டு செல்ல முடியுமோ, அவற்றின் பட்டியல் தயார் செய்தார் செட்டியார்.

தன் பொறுப்பில் உள்ள இரண்டு அரை வண்டிகளைத் தயார் செய்தார். அவற்றிற்கேற்ப மாடுகளை பூட்டுவதற்குத் தோதாக ஆயத்தம் செய்யத் தொடங்கினார்.

தன் ஏவலுக்கு உட்பட்ட பண்ணை வேலைக்காரி அழகம்மாவை அழைத்து அவள் கணவன் சொக்கையாவையும் தயார் செய்தார்.

அதைபோல இரண்டாம் வேலைக்கார அம்மாள், பழனியம்மாளையும் அவள் கணவன் கருப்பையாவையும் ஆயத்தம் செய்து வைத்தார். அவர்களுக்கு தானும் தன் குடும்பமும் சேர்ந்து யாத்திரை செல்வதாகவும் அதற்கு அவர்களை துணைவர வேண்டுமென்றும் பணித்து வைத்தார்கள்.

இதற்கிடையில் இளம் வீரர்கள் இருவரைத் தேர்ந்தெடுத்து ஈட்டிக்காரர்களாக வரும்படி சொல்லி வைத்தார். இப்படி ஒவ்வொரு காரியத்தையும் சிந்தித்துச் செயல்படுத்தினார் நல்லடைக்கலம் செட்டியார்.

மயான அமைதி கொண்டிருந்த அந்த வீட்டில் ஆச்சியும் அம்மகளும் எதுவும் பேசாமல் ஒரு புறம் அமைதியாக இருந்தார்கள்.

யாத்திரை செல்கிறார்கள் என்று ஊரார்கள் நினைக்கும் விதத்தில் அமைதியாக ஆனால் ஆழமாகச் சிந்தித்துச் செயல்பட்டார்கள்.

பகல் நேரம் ஓடிக் கொண்டிருந்தது. மாலையில் வீட்டின் முன் இரண்டு அரை வண்டிகள் மாடுகள் பூட்டி ஆயத்தமாக நின்றன. ஒரு வண்டியில் சாமான்கள் ஏற்றிக் கொண்டிருந்தனர். அவற்றுக்கிடையே ஒரு மூலையில் இரண்டு பணிப்பெண்கள், அழகம்மாள், பழனியம்மாள் நெருக்கி உட்கார்ந்து கொண்டனர்.

இரண்டாம் வண்டியில் செட்டியாரும் ஆச்சியும் அவர்கள் மகன் நாச்சியப்பனும் ஏற வேண்டுமென்ற ஏற்பாடு.

காலம் கழிந்து கொண்டிருந்தது. மெல்லப் பகல் கழித்து இரவு தலைப்பட ஆரம்பித்து விட்டது.

அப்போது அவ்வீட்டினுள் யாரும் வெளிப்பட அறியா வண்ணம் அந்த அதிசயம் அற்புதம் நிகழ ஆரம்பித்து விட்டன.

அழகு மகள் செல்விக்குப் பூட்டிய மங்கல அணிகள் கழற்றப்பட்டு, நாய்க்குப் பூட்டி, வீட்டின் முன் கட்டி வைத்தனர். மகளின் பட்டுப்புடவை போர்த்திய உடம்பு மெல்ல கம்பந்தாழியில் இறங்கி விட்டது. செட்டியாருக்கு அழுது அழுது கண்கள் சிவந்து விட்டன. ஆச்சிக்கு என்ன நடக்கிறது என்று தெரியாமல் மயங்கிக் கிடக்கிறார். யார் தடுத்தாலும் தன்னைப் புறக்கணித்து தானே கம்பந்தாழியில் இறங்கி உயிர் விட்டாள் மகள்.

இந்தத் துயரமான சூழ்நிலையில் தன்னை ஒருவாறு தேத்திக் கொண்ட நல்லடைக்கலம் செட்டியார், தானே தன்மகளின் முடிவை ஏற்று அவளுக்கு தேங்காய் உடைத்து சடங்கு செய்து விளக்குத்

தணியாது ஏற்றி எரிய விட்டு, வீட்டுப் பெண்களை அழைத்துக் கொண்டு தன் மகனைக் கூட்டிக் கொண்டு வீட்டைத் தாழிட்டு விட்டு வண்டிகளில் ஏறினார். வண்டிகள் இரண்டும் வீரர்கள் முன்னும் பின்னும் செல்ல வேகமாகப் புறப்பட்டன தென் திசை நோக்கி.

மாவேகம், மலைவேகம் என்று சொல்லத்தக்க விதத்தில், இரண்டு வண்டிகளும் பறந்து கொண்டிருந்தன. ஊர் மக்கள் அனைவரும் தம் தம் வீடுகளைத் தாழிட்டுக் கொண்டு உள்ளேயே இருந்தார்கள்.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. இரவு முன்னிருட்டு நேரமாக இருந்ததால் இருள் சூழ்ந்து இருந்தது.

ஆம் அன்றைய நாள் 1806ம் ஆண்டு ஏப்ரல் திங்கள் இருப்பதாறாம் தேதி.

இரவு நெடுநேரம் ஆகிக் கொண்டிருந்தது. அப்போது இரட்டைக் குதிரை பூட்டிய சாரட்டு வண்டி ஓடி வந்து, செட்டியாரின் இல்லத்தின் முன் நின்றது. வண்டியில் இருந்து புதுக்கோட்டை மன்னர் தொண்டைமான் தன் உடம்பின் மேல் பட்டாடைகள் அணிந்து வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொண்டு மணமணக்க இறங்கினார்.

அப்போது வீட்டின் உள் இருந்து யாரும் வரவில்லை. வீட்டின் முன் வளர்ப்பு நாய் ஒன்று கட்டி நின்றது. அதன்மேல் அணிகலன்கள் பூட்டியிருந்தது. வீட்டின் உள்ளே யாரும் இல்லை.

செட்டியார். செட்டியார் என்றழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்த புதுக்கோட்டை மன்னன் தொண்டைமான் எதுவும் புரியாமல் திகைத்து மயங்கிய நிலையில் உள்ளே காலடி எடுத்து வைத்தார்.

வீட்டிற்குள் எவரையும் காணாத நிலையில் உள்ளே பார்த்தார். திகைத்தார். விளக்குகள் எரிந்தன. தேங்காய் மட்டும் உடைத்து கம்பந்தாழியின் முன் வைக்கப்பட்டு இருந்தது. மன்னன் தொண்டைமானுக்குத் திகைப்பாய் இருந்தது. மெல்லக் கம்பந்தாழியின் அருகே வந்தார். தாழியின் மூடியைத் திறந்து பார்த்தார்.

கம்பந்தாழிக்குள்ளே அழகு மகள் கன்னி இளந்தேவதை கண்மூடிக் கிடந்த நிலையைக் கண்டு துக்கித்துப்போனார். திகைப்பின் எல்லை அடங்காத நிலையில் என்ன செய்வது என்று தான் உணராத நிலைமையில் அதைப் பார்த்து பார்த்து நின்று கொண்டு இருந்தார். புதுக்கோட்டை மன்னர் தொண்டைமான் அவர்கள் திகைப்பு அடங்காத நிலையில் தன்னுடைய அடுத்த பணி என்னவென்று சிந்திக்கத் தொடங்கினார் மன்னர். நீண்ட சிந்தனைக்குப் பிறகு தன்னுடைய கடமை எது என்று அவருக்குப் புலப்பட்டது.

தன் ஆசை இப்படிப் பயங்கரக் கனவாக முடிந்த நிலையில் அடுத்து என்ன செய்வது? எப்படிச் செய்வது என்று யோசிக்கத் தொடங்கினார். முதலில் வந்த கோபத்தில் செட்டியாரை வழியில் மடக்கிப் பிடித்து விடுவதுதான் நல்லது என்ற நிலைக்கு வந்தவர்க்கு அடுத்து நேர்ந்த சிந்தனை அதை எப்படிப் போக்குவது என்று புலப்பட்டது.

தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருக்கின்ற நல்லடைக்கலம் செட்டியாரை வழிமறித்தல் ஆகாது என்று புலப்பட்டது. வெறுமேகிடந்த வீட்டை விட்டு வெளியே வந்த மன்னன் தொண்டைமான் என்ன சொல்வது என்று எவருக்கும் புலப்படவில்லை. கண்கள் குளமாக மெதுவாகச் சாரட்டு வண்டியில் ஏற சாரட்டு வண்டி அரண்மனை நோக்கித் திரும்பிச் சென்றது.

திருவேட்பூர் (திருவப்பூர்) இல்லத்திலிருந்து புறப்பட்ட இரண்டு மாட்டு வண்டிகளுக்கு முன் வீரன் பின் வீரன் என்பது போல இரட்டை ஈட்டிக்காரர்களும் முன்னேயும் பின்னேயும் அணிவகுக்க நல்லடைக்கலம் செட்டியார் தென் திசைநோக்கிப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறார்.

வழியில் குறுக்கிட்ட பெரிய ஆறு வெள்ளாறு. கோடை காலம். என்பதால் நீரின்றிக் கிடக்கிறது. அதனை இரண்டு இரட்டை மாட்டு வண்டிகளும் கடக்கத் தொடங்கின. வழியில் ஏதும் பேசாநிலையில் வந்து கொண்டிருந்த நல்லடைக்கலம் செட்டியார் மெல்ல இறங்கிகொள்ள, பணிப்பெண்களும் இறங்கிக் கொள்ள வண்டிகளை மெல்லத் தூக்கியும் தூக்காமலும் தாங்கிப் பிடித்து மெல்ல அக்கரை சேர்த்தனர்.

அக்கரை வந்து சேர்ந்ததும் நல்லடைக்கலம் செட்டியாருக்கு மெல்ல உணர்வு திரும்பியது. அப்பா மெதுவாகப் போங்கள் என்று சொல்லி வைத்தார். அக்குரலில் இருந்த நம்பிக்கை மெல்ல மற்றவர்க்கும் பரவிட எல்லோரும் எல்லாம் நல்லவிதமாகப் போவதாகச் சொல்லிக் கொண்டு பயணம் தொடர்ந்தனர்.

மாட்டு வண்டிகளில் பூட்டிய காளைகள் இன்னும் எத்தனை மைல் வேண்டுமானாலும் போகலாம் என்று துணிந்து நின்றன. மெதுவாகப் புறப்பட்டு வண்டிகள் இரண்டும் அரிமழம் ஊர் எல்லையை அடைந்தன. அப்பொழுது ஊர்த்துயில் மறந்து எழுந்து நிற்கின்ற நிலை. ஊருக்குள் நுழைந்த வண்டிகள் மெதுவாகச் சாலையின் ஓரத்தில் அவிழ்த்து விடப்பட்டு வண்டிகள் நின்றன.

அரிமழம் நாட்டுக்கோட்டை நகரத்தாரின் பெரிய ஊர். அங்கே வந்து விடவேண்டுமென்றுதான் நல்லடைக்கலம் செட்டியார் மிகுந்த மனவேதனையும் முக்கியத்துவம் காட்டி வந்தார். தன்னுடைய நெடும் பயணத்தில் கால்வாசியைக் கடந்து விட்டோம் என்று நிம்மதி பெருமூச்சு விட்டார் செட்டியார்.

அரிமழம் ஊரில் காலை நேரமாக இருந்ததினால் ஊர் மக்கள் வெளியே காலைக்கடன் முடிக்கப் போய் கொண்டிருந்த தருணம். நல்லடைக்கலம் செட்டியார் குழுவினர் அங்கு அவிழ்த்து விடப்பட்ட வண்டிகளை விட்டு வெளியே வந்து ஊர்மக்களிடம் உரையாடினார். எவரிடத்திலு தன்னுடைய பயணத் திட்டத்தை சொல்லவில்லை. தாங்கள் யாத்திரை செல்வதாகக் கூறினார்கள்.

அரிமழம் ஊரார் மிகுந்த மகிழ்ச்சியுடன் நல்லடைக்கலம் செட்டியாரின் குழுவினரை வரவேற்று உபசரித்துக் கொண்டனர். அவர்கள் தேவைகளைக் கேட்டறிந்து கொள்ள முயன்றார்கள். ஆனால் நல்லடைக்கலம் செட்டியார் குழுவினர் எதுவும் தமக்குத் தேவை இல்லை என்று சொல்லி விட்டு மெதுவாகக் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு தம் பயணத்தின் அடுத்த கட்டத்தைத் தொடர்ந்தனர்.

அடுத்து ஆறு பாம்பாறு குறுக்கிட்டது. ஆற்றைக் கஷ்டப்பட்டு இருமாட்டு வண்டிகளும் கடந்து கொண்டிருந்தன. இப்படிக் கஷ்டப்பட்டு வந்து கொண்டிருந்த மாட்டு வண்டிகளையும் வீரர்களையும் அடுத்த ஊர் அமைதியாக வரவேற்கக் காத்திருந்தது.

அந்த ஊர் பெருங்குடிக் கரையிலிருந்து கைலாசநாதர் திருக்கோவில் ஆகும். கோவிலின் பிரகாரத்தை நெருங்கிய நாச்சியப்ப செட்டியாருக்கும் குழுவினருக்கும் ஊரில் இருந்து பொதுமக்கள் ஆவலுடன் வரவேற்று உபசரிக்கக் கொடுத்து வைத்திருந்தது.

கைலாசநாதர் திருக்கோவிலின் கரையில் இருந்த தெய்வங்களை வணங்கினர். தமது பயணம் வெற்றிகரமாக நடக்க வேண்டுமென்று கோரிக்கை வைத்தார் நல்லடைக்கலம் செட்டியார். எல்லோரும் தெய்வதரிசனம் முடித்துக் கொண்டு பயணம் தொடர்ந்தனர்.

ஊரார் கொடுத்த நீர், சுண்டல், வறுகடலை, பொரிஉருண்டை வகைகள் எல்லாம் நிறைய இருந்தன. மாட்டு வண்டிகள் அடுத்த ஊர் நோக்கிப் புறப்பட்டன. ஊரை நெருங்க, நெருங்க நல்லடைக்கலம் செட்டியார் சிந்தனை வேகமாகத் தென்பட்டது.

தன் பணிக்காலம் எவ்வாறு நடந்தது என்று நல்லடைக்கலம் செட்டியார் எண்ணிப்பார்த்து எதில் எத்தனை நல்லது நடந்தது என்று சிந்திக்கத் தொடங்கினார்.

மன்னர் தொண்டைமானின் அரண்மனை வேலைகளும் சமஸ்தானத்துப் பொறுப்புகளும் திருவேட்பூர் (திருவப்பூர்) இல்லத்தில் உள்ள தனது அலுவல்களும் ஒவ்வொன்றாகத் தகாத வேலை என்று ஒதுக்கி விட்டு தனது அடுத்த கடமைகளை, பொறுப்புகளை, அலுவல்களை எண்ணத் தலைப்பட்டார்.

பயண வண்டிகளும் இரு வீரர்களும் மாட்டு வண்டிப்பாதையில் உள்ளவற்றை விலக்கிவிட்டுக் கொண்டே சென்று கொண்டிருக்க பயணம் வெற்றிகரமாக அடுத்த ஊரை அடைகின்றது.

அந்த ஊரை அடைய காலை 11-00 மணி ஆகியிருந்தது. மாடுகள் சற்றுக் களைப்பாக இருந்ததால் ஓய்வு தேவைப்பட்டாற்போலத் தோன்றியது. வண்டியில் உள்ளவர்களுக்கு சற்றே ஓய்வு தேவைப்பட்டது.

புதுவயல் என்ற அந்த ஊர் நல்லடைக்கலம் செட்டியார் குழுவினரை வரவேற்கக் கூடியிருந்தது. புதுவயல் நகரத்தார் எல்லோரும் ஒன்றுகூடி புதுக்கோட்டை சமஸ்தான அமைச்சர் நல்லடைக்கலம் செட்டியாருக்கு வரவேற்புக் கொடுத்தனர். நகரத்தார் பெருமக்கள் ஒவ்வொருவரும் தங்களால் ஆன உபசரிப்பைச் செய்து கொண்டிருந்தனர்.

யாத்திரை செல்வதாகச் சொன்ன நல்லடைக்கலம் செட்டியார் நேற்று இரவு தன் வீட்டில் என்ன நடந்தது என்று எவருக்கும் காட்டவில்லை. எந்த வகையிலும் தன் துயரத்தை மறந்து கொண்டிருந்த, மறைத்துக் கொண்டு இருந்த, குழுவினர் தனது ஓய்வுதனை எடுத்துக் கொண்டிருந்தனர்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்கள், குழுவினரை வரவேற்று தமது இல்லத்திற்கு அழைத்தனர். நல்லடைக்கலம் செட்டியார் தனது குழுவினருடன் வீடுகளில் ஓய்வு எடுத்துக் கொண்டு அடுத்த பயணத்தைத் தொடங்கினார். அப்பொழுது மணி மாலை 3-00 மணி.

நல்லடைக்கலம் செட்டியாருக்கு இப்பொழுது தனது நிலையில் உறுதி ஏற்பட்டது. எந்த வகையிலும் புதுக்கோட்டை மன்னன் தம்மைத் தொடரவில்லை என்று தெரிந்து கொண்டு பயணத்தைத் தெளிவான துணிவாக தொடர்ந்தார். அவர் மனைவி ஆச்சியும் தம் துயரத்தை ஒருவாறு மறந்து விட்டாற்போல் அந்த குழுவினரின் செயல்களில் ஈடுபாடு கொண்டு இருந்தார்.

மாடுகளும் வீரர்களும் சற்று வேகமாகப் பயணத்தைத் தொடர்ந்தனர். அப்போது சாக்கோட்டை என்ற ஊரை அடைந்தனர்.

சாக்கோட்டை அம்மனைத் தரிசித்துக் கொண்டு திரும்பியவர்களை நாட்டார் பெருமக்கள் ஒன்றுகூடி வரவேற்புக் கொடுத்தனர். அவர்கள் எளிமையாக இருந்தாலும் உபசரிப்பில் யாருக்கும் சளைத்தவர்கள் இல்லை என்பது போல் வரவேற்பு நல்ல முறையில் அமைந்தது.

அந்த வரவேற்பைப் பெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டு மாட்டு வண்டிகள் பயணம் தெற்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

இப்பொழுது தான் இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த முன்னிருட்டிலும் வண்டி உஞ்சனை என்ற ஊரை வந்தடைந்தன. உஞ்சனையில் சற்றே ஓய்வு எடுத்துக் கொண்டு வண்டிகளை வேகமாகத் தென்திசை நோக்கித் திருப்பினார்கள்.

கண்டதேவி என்ற அந்தப் புண்ணிய தலம் இப்பொழுது நல்லடைக்கலம் செட்டியார் குழுவினர்களின் கண்களுக்குப் புலப்பட்டது. கண்டதேவிக் கோவிலில் தரிசனம் செய்து கொண்டு, வண்டிகள் சற்றே வேகமாகத் தென்திசை நோக்கிப் பயணத்தைத் தொடங்கினர்.

தேவகோட்டை என்ற அந்தப் பெருநகரம் இன்றும் 4 மைல் தூரத்தில் தான் இருக்கிறது. நல்லடைக்கலம் செட்டியாரின் சிந்தனை இப்பொழுது பலதிசையிலும் சிந்திக்கத் தொடங்கி விட்டது தான் காரணம்.

தேவகோட்டை ஜமீன் பரம்பரையைத் தேடிப் போய்க் கொண்டிருக்கிறது, நல்லடைக்கலம் செட்டியார் குழுவினர். இருபக்கமும் ஈட்டி வீரர்கள் இரண்டு மாட்டு வண்டிகள். வண்டிகளில் யானை போன்ற முரட்டு மாடுகள் வண்டிகள் வேகமாகச் சென்று கொண்டிருக்கின்றன.

நல்லடைக்கலம் செட்டியாருக்கு தனது முந்தைய நாள் நினைவுகள் பளிச்சென்று மின்னின. புதுக்கோட்டை சமஸ்தானத்திற்கு அதன் மன்னர் தொண்டைமானுக்கு தான் செய்து வந்த செய்வித்த பல்வேறு அலுவல்களை எண்ணிப்பார்க்கும் அந்தச் சிறிய சமஸ்தானத்தில் எத்தனை பெரிய அலுவல்களைச் செய்து அவர் முடித்திருக்கிறார். அவற்றையெல்லாம் மனக்கண்முன் நிறுத்திப் பார்க்கிறார். போனதெல்லாம் போகட்டும் எல்லாம் பழங்கனவாய் முடிந்தன என்று அவற்றைப் புறந்தள்ளி விட்டு மறந்து விடு, மறைத்து விடு, மனக்கண் முன்னால், தனது புதிய திட்டங்களைச் சிந்திக்கத் தொடங்கினார்.

தேவகோட்டை ஜமீன் பழமையானது. 96 ஊர்களில் அதன் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். 96 ஊரைச்சுற்றிலும் எண்ணற்ற கிராம மக்கள். எவ்வளவு உழவு வேலைகள். புதிய வாழ்வு பற்றிய எண்ணம் புதிதாக முளைக்கத் தொடங்கியிருந்தது.

தேவகோட்டை ஜமீன் பரம்பரை, நாட்டுக் கோட்டை தன வணிகர் என்ற நகரத்தாருக்கே சொந்தமானது. அந்த நகரத்தார் செல்வச் செழிப்போடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள், என்பது நல்லடைக்கலம் செட்டியார் முற்றிலும் அறிந்ததே.

ஒன்பது கோயில்களைத் தன்னகத்தே கண்டு, அந்த ஒன்பது கோயில்களிலும் தன வணிகப் பெருமக்கள் செல்வச் செழிப்போடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

நல்லடைக்கலம் செட்டியார் சார்ந்துள்ள திருவேட்பூர் பஞ்சு வணிகச் செட்டியார்களும் ஒன்பது புரங்களை கொண்டு பிரிக்கப்பட்டு இருக்கிறது. திருவேட்பூர் தலைமையாகக் கொண்டதால் நல்லடைக்கலம் செட்டியார் வகையைத் திருவேட்பூர் செட்டியார் என்றே அழைக்கலாயினர்.

தேவகோட்டையில் உள்ள ஜமீனிலும், ஜமீன்தார் குடும்பத்திலும் தனது புதுக்கோட்டை சமஸ்தான அமைச்சர் என்ற முறையில் உள்ள சிறப்புகளைக் கொண்டு இணையலாம் என்று தான் தேவகோட்டை நோக்கி வந்து கொண்டிருக்கிறார் நல்லடைக்கலம் செட்டியார்.

தேவகோட்டை இன்னும் இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. ஊரின் சிறப்புகள் மிகத்தெளிவாக கண்ணுக்கு புலப்பட்டன. லாந்தர் விளக்கை ஆங்காங்கே கட்டித் தொங்க விடப்பட்டிருந்தன. மக்களின் அன்றாடத் தேவைகள் இப்படிப் பலதரப்பட்ட மணங்கள் நாச்சியப்பனை மகிழ்வித்தன. தனது மகிழ்வினை புலப்படுத்தும் விதத்தில் இப்பொழுது நல்லடைக்கலம் செட்டியார் முற்றிலும் மாறுபட்டு மகிழ்ந்து நிற்கிறார்.

தேவகோட்டையைச் செட்டியார் குழுவினர் அடைந்தனர். பெரிய மண்டலங்கள், பெருந்தூண்கள் ஆங்காங்கே எழுந்துள்ள மாளிகைகள் என்ற பலதரப்பட்ட இல்லங்கள் நிறைந்த நகரம் தேவகோட்டை ஆகும்.

தேவகோட்டை ஜமீன் இல்லம் நெருங்கியது. அது இல்லம் மட்டுமல்ல. பெரிய மாளிகை. அங்கே மாட்டு வண்டிகள் வணிகர் திரண்டு, இரு ஈட்டி வீரர் சகிதம் நாச்சியப்ப செட்டியார் குழுவினர் ஜமீன்தார் மாளிகையை அடைந்தனர்.

வாயிலில் நின்ற காவலாளியிடம் தான் புதுக்கோட்டை சமஸ்தானத்திலிருந்து வருவதாகவும், புதுக்கோட்டை மன்னரின் அமைச்சர் என்றும், தன் பெயர் நல்லடைக்கலம் செட்டியார் என்றும் அறிவிக்கச் சொல்கிறார்.

காவலாளி உள்ளே சென்று விட்டு, வேகமாக வெளியே வந்து நல்லடைக்கலம் செட்டியாரிடம் பெரிய செட்டியார் உள்ளே அழைப்பதாகச் சொல்கின்றார்.

நல்லடைக்கலம் செட்டியார் மற்றவர்களை வண்டியிலேயே தங்கச் சொல்லிவிட்டு தான் மட்டும் உள்ளே பணிவாக அதே சமயம் இதமாகச் செல்கிறார்.

உள்ளே பெரிய செட்டியார் என்றழைக்கப்படும் ஜமீன்தார் இருக்கிறார். நல்லடைக்கலம் செட்டியாரைக் கண்டதும் எழுந்து நின்று வாருங்கள்! வாருங்கள்! என்று அழைக்கிறார். நல்லடைக்கலம் செட்டியார் வணங்கிவிட்டு நிற்கிறார்.

அப்பொழுது பெரிய செட்டியார் நல்லடைக்கலம் செட்டியாரைப் பார்த்து ஆசனத்தில் அமரச் சொல்கிறார். ஆசனத்தில் அமர்ந்த நல்லடைக்கலம் செட்டியாருக்கு புதுவாழ்வு புரிந்தது. புதிய வேகம் பிறந்தது.

"என்ன நல்லடைக்கலம். எல்லோரும் நலம் தானே" என்று அழைத்த பெரிய செட்டியாரை, வணங்கிவிட்டு தன் குடும்பத்திற்கு ஏற்பட்ட அநீதியை புதுக்கோட்டை மன்னரின் அடாத செயலைச் சுருங்கச் சொல்கிறார் நல்லடைக்கலம் செட்டியார்.

எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்ட பெரிய செட்டியார் நல்லடைக்கலம் செட்டியாரை ஓய்வெடுக்கப் பணிக்கிறார். அதன்படி அந்த மாளிகையின் ஒரு புறம் தனக்கும், தன் மனைவி மகனுக்கும் பணிப்பெண்களும் ஓய்வு எடுக்க தொடங்குகின்றார்கள்.

இவ்விதம் புதுக்கோட்டை சமஸ்தானத்திலிருந்து தேவகோட்டை ஜமீனுக்கு ஒரேநாளில் மாற்றல் நடக்கிறது.

மறுநாள் பொழுது விடிகிறது. பெரிய செட்டியார் என்ற ஜமீன்தார் அதிகாலையில் விழித்து தன் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு, சிவபூஜை செய்து முடிக்கிறார். அதுசமயம் நல்லடைக்கலம் செட்டியார் தானும் விழித்து சென்று பெரிய செட்டியாரை வணங்குகிறார்.

அப்பொழுது ஜமீன்தார் (பெரிய செட்டியார்) நல்லடைக்கலத்தைப் பார்க்க, "சரி நீ இப்பொழுது கோட்டூர் சென்று அங்கே எழுந்தருளியிருக்கும் மந்திக் கருப்பரை வணங்கி வா. உனக்கு எல்லாம் நல்லாயிருக்கும். மன அமைதியும், தன்னம்பிக்கையும் உருவாகும்" என்று சொல்வதைக் கேட்டு விடை பெறுகிறார்.

தெற்கு நோக்கிப் பயணம் தொடர்கிறது. தேவகோட்டை அடுத்து விரிசிலையாறு (மணிமுத்தாறு) தனைக் கடந்து நல்லடைக்கலம் செட்டியார் குழுவினர் தொடர்கின்றனர்.

முன்னே ஒரு ஈட்டி வீரன். அடுத்து ஒரு மாட்டு வண்டியில் நல்லடைக்கலம் செட்டியார், அவர் மனைவி, மகன் நாச்சியப்பன் ஆகியோர் செல்கின்றனர். அடுத்த வண்டியில் சாமான்களும் பணிப் பெண்களும் உள்ளனர். கடைசியில் ஓர் ஈட்டிவீரன். இவ்விதம் குழுவினர் பயணம் ஆகி நான்கு மைல்தூரம் கடந்து கடைசியில் ஒரு கோவிலை பார்க்கின்றனர்.

கோட்டூர் என்ற நயினார் வயலில் எழுந்தருளியிருக்கும் கோயிலை நெருங்குகின்றனர். ஒவ்வொருவரும் தம் காலைக் கடனை முடித்துக் கொண்டு நீராடி முடித்து நிறைந்த மனதுடன் ஆண்டவனைத் தரிசிக்க கோயிலுக்குள் செல்கின்றனர்.

ஆ. அது ஒரு அற்புதமான இடம். அங்கே எழுந்தருளி இருக்கும் இறைவனையும் இறைவியையும் தரிசிக்கின்றனர். அப்போது தென் மேற்கு மூலையில் உள்ள தெய்வத்தைப் பார்க்கின்றனர்.

அன்று வெள்ளிக்கிழமை ஆதலால், ஊர் மக்கள் எல்லாம் குழுமி அத்தெய்வத்தை வழிபடத் தொடங்குகின்றனர்.

அத்தெய்வம்தான் வழிபடுவதற்கேற்ற மந்திக்கருப்பர் என்று மக்கள் எல்லாம் கூறுகின்றனர். அது ஒரு சிறிய மேடைதான். வேறு ஒன்றும் இல்லை. அந்த மேடையில் ஒரு கிரீடம் வைக்கப்பட்டு அதில் மணமிகுந்த சந்தனப் பொடிகளைத் தூவி எலுமிச்சம் பழத்தையும் வைத்து கற்பூரம் காட்டி வழிபாடு செய்கின்றனர். நல்ல மணமாலைகளைத் தேர்ந்தெடுத்து அங்கு சார்த்தி வைக்கப்பட்டு எல்லோரும் வணங்குகின்றனர்.

அந்த திருக்கோயிலைக் கண்ட நல்லடைக்கலம் செட்டியார் தன் கவலைகளை மறந்து புத்துயிர் கொண்டு கிடைத்தற்கரிய காட்சியாக விழுந்து எழுகின்றார். அவர் துணைவி ஆச்சியும் தன் கவலைகளை மறந்து பரவசப்பட்டு விழுந்து எழுகின்றனர். மகன் நாச்சியப்பனும் தொழுது எழுகின்றான். அப்பொழுது உள்ளம் எல்லாம் பரவசமாகித் தெய்வத்திடம் ஈடுபாடு கொண்டு வணங்குகின்றனர். தெய்வம் நன்கு அலங்கரிக்கப்பட்டு அய்யர் பூசை செய்கிறார். அவர் கொடுத்த திருநீறை வாங்கி எல்லோரும் பூசிக் கொள்கின்றனர். கந்தவெடிக் கருப்பர் என்ற மந்தி கருப்பரின் அருள் அந்த இடம் எல்லாம் நிறைந்து நிற்கிறது. இவ்விதம் கோட்டூர்க்கோயிலை தன் வீட்டுத்தெய்வமாக ஏற்று வணங்கி பரவசப்படுகின்றார்.

கோட்டூர் கந்தவெடிக் கருப்பர் என்ற மந்திக் கருப்பரின் அருள் எல்லோருக்கும் கிடைக்கின்றது. அதன்பலன் தான் தங்குவதற்கு ஏற்ற இடம் கோட்டூர்தான் என்று முடிவு செய்கின்றார். வண்டிகள் எல்லாம் அவிழ்த்து விடப்பட்டு மாடுகள் எல்லாம் தனித் தனியே கட்டப்பட்டு அங்கு எல்லோரும் தங்குவதற்கு ஏற்ற இடம் ஒன்று தெரிகிறது அந்த இடத்தில் கொண்டு வந்த சாமான்கள் எல்லாம் இறக்கி வைக்கப்படுகின்றன. பணிப்பெண்கள் அவசரம் அவசரமாக இறக்கி வைக்கின்றனர். இவ்விதம் புதுக்கோட்டை திருவேட்பூர் (திருவப்பூர்) செட்டித் தெருவில் இருந்த நல்லடைக்கலம் செட்டியார் குழுவினர் கோட்டூர் இடத்தைத் தேர்ந்தெடுத்து தங்கத் தொடங்கினர்.

கோட்டூர் மனதுக்கும் பிடித்த ஊர். பெரிய செட்டியார் சொன்னபடி தனக்கு ஏற்ற இடம் என்பதை நல்லடைக்கலம் செட்டியார் தேர்வு செய்தார். வீட்டினுள் எல்லாம் இறக்கி வைத்து அவரவர் தம் இடத்தில் ஓய்வு எடுத்துக் கொள்கின்றனர்.

தமக்கும் தம் குழுவினருக்கும் ஏற்ற வகையில் அவ்வீட்டினுள் அவரவர்க்கு ஏற்ற உணவு தயாரிக்கும் பணியில் பணிப்பெண்கள் ஈடுபட்டிருக்கின்றனர்.

எல்லாம் நல்ல விதமாக நடந்ததாக எண்ணி மனம் அமைதியடைந்து பூரித்தார். நல்லடைக்கலம் செட்டியார். கந்தவெடிக்கருப்பர் என்ற மந்திக்கருப்பரை மனமாரப் பூசித்தார். அவர் கண்கள் ஆனந்தக் கண்ணீரால் நிறைந்து இருந்தன.

கோட்டூர் கோயிலை வணங்கி நமது கட்டுரையை முடிக்க விரும்புகின்றேன். அதன்படி இதுவரை இருந்த கடந்த நிகழ்வுகளை மனத்தில் நிறைத்துக் கொண்டு பின்வரும் பகுதியினைப் படிக்க வேண்டும் என உங்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

புதுக்கோட்டை திருவேட்பூர் செட்டித் தெருவில் இருந்த நல்லடைக்கலம் செட்டியார், மன்னன் தொண்டைமானை மறந்து ஊர் விட்டு ஊர் வந்து இப்பொழுது கோட்டூர்க் கோவிலைத் தஞ்சம் என்று தங்கினார். அத்திருப்பணியால் தேவகோட்டை ஜமீன்தார் பெரிய செட்டியார் பெரும்பங்கு ஆற்றியுள்ளார்.

<u>இப்போது செட்டியாரின் தலைமுறை அட்டவனை நமக்குப் புலப்பட வேண்டும்</u>

1. நல்லடைக்கலம் செட்டியார் (தேவகோட்டைக்கு வந்தவர்)
2. நல்லடைக்கலம் செட்டியார் மகன் நாச்சியப்ப செட்டி
3. நாச்சியப்ப செட்டி மகன் ஆண்டியப்ப செட்டி
4. ஆண்டியப்ப செட்டி மகன் கிருஷ்ணன் செட்டி
5. கிருஷ்ணன் செட்டி மகன் ஆண்டியப்ப செட்டி
6. ஆண்டியப்ப செட்டி மகன் மாயாண்டி செட்டி
7. மாயாண்டி செட்டி மகன் மா. ஆண்டியப்பன் (நாவுக்கரசன்)

இதை எழுதி முடித்து வைத்தவர் மா. ஆண்டியப்பன் என்ற நாவுக்கரசன். கோட்டூர்கோவில் அருளால் யாவும் நலமாக அமைய வழிபாடு செய்வோம்.

## தொலைபேசித்துறையில் - தொழிற்சங்கக் களத்தில் என்பங்கும் பணிகளும்

1956 ஆம் ஆண்டில் சேலத்தில் என் பணியைத் தொடங்கினேன். தொலைபேசி இயக்குநராகச் சேர்ந்தேன். சேலம் கிளை மாநாட்டில் பங்கு கொண்டு வரவேற்புக் கவிதை வழங்கினேன்.

1958 ஆம் ஆண்டில் தேனிக்கிளை அமைக்கப்பெற்று தேனிச் செயலருக்கு தேர்வு பெற்றேன். அக்கிளையின் சார்பில் கொடைக்கானலில் சங்கக் கூட்டம் நடத்தினேன்.

தமிழகம், கேரளம், கர்நாடகம் இணைந்திருந்த கள்ளிக்கோட்டை மாநாட்டில் தேனியின் சார்பாளராகப் பங்கு கொண்டேன். விவாதங்களின் சிறப்பாகப் பங்கு கொண்டேன். அங்குதான் எனது உள்ளங்கவர்ந்த சேவியர் லாரன்ஸ் அவர்களிடம் முதன்முதலாக அறிமுகம் ஆனேன். திரும்பும் வழியில் கேரளத்தில் கூட்டங்கள் நடத்தப் பெற்றன. துடிப்புமிக்க இளம்வீரர் எனக் கூட்டங்களில் அறிமுகமாகி உரை நிகழ்த்தினேன்.

1960 ஆம் ஆண்டு பெங்களூரில் நடந்த அகில இந்திய மாநாட்டில் காரைக்குடி கிளையில் செயலராக, சார்பாளராக பணியாற்றினேன். சங்கத்திற்கு ஒரு தேசியகீதம் என்னால் வழங்கிடப்பெற்று அம்மாநாட்டில் இசைக்கப்பெற்றது என் வாழ்வின் இனிய அனுபவம்.

1960 ஆம் ஆண்டு ஜூலைத்திங்களில் காலவரையற்ற வேலை நிறுத்தப் போராட்டத்தில் போராட்டக் குழுவின் பொறுப்பாளராகப் பணி ஆற்றினேன். வாழைத்தோப்பு முகாம் நடத்தி நான்கு நாட்கள் உறுதிமிக்க போராட்டத்திற்கு தலைமை ஏற்றேன். காவல் துறையின் தொல்லைகள் இரவெல்லாம் நடந்தது. பணிவிலக்கல் ஆணை எனக்கு வழங்கப் பெற்றது. குற்றப்பத்திரிகையும் என்மீது வீசப்பெற்றது. திரு. சேவியர் லாரன்ஸ் அவர்கள் வருகை புரிந்து குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு ஆதரவாகப் பேசியதால் எனக்கு வேலை மீண்டும் கிடைத்தது. . இது மறக்க முடியாதது.

1961 ஆம் ஆண்டில் சென்னை மாநில மாநாட்டில் பொதுச்செயலர் குப்தா அவர்களின் சர்வாதிகாரப் போக்கைக் கண்டித்து வாக்கெடுப்பு நடத்தி வெற்றி கண்டேன். அதன்மூலம் சங்க ஏடான TELE FLASH காப்பாற்றப்பட்டது. எதிர்முகாம் சென்னையில் உருவாகியது என் தலைமையில்.

1963 ஆம் ஆண்டு தஞ்சையில் நடைபெற்ற மாநில மாநாட்டில் நான் வரவேற்புக் குழுத் துணைச் செயலருக்குத் தேர்வு பெற்றேன். மாநாட்டிற்காகப் பயணம் செய்தேன். பணிகளைத் தொடர்ந்தேன். அந்த மாநாட்டில் குப்தாவின் சர்வாதிகாரத்தை எதிர்த்து வெளிநடப்பு நிகழ்ந்தது. எதிர்ப்பு வலுப்பெற்றது.

1964 ஆம் ஆண்டு மதுரையில் நடந்த மாநில மாநாட்டில் முதன்முதலாய் போட்டியிட்டு மாநிலத்தின் ஒரே ஒரு அமைப்புச் செயலராக பெரும் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றேன். அதைத் தொடர்ந்து தமிழகம் முழுதும் சுற்றுப்பயணம் செய்தேன். உறுப்பினர் சேர்ப்பு இயக்கத்தில் எண்ணிக்கை உயர்ந்தது. புதிய கிளைகள் நாடெங்கிலும் அமைக்கப்பெற்றன.

1965 ஆம் ஆண்டு சேலத்தில் நடைபெற்ற மாநில மாநாட்டில் மாநில அமைப்புச் செயலராக மீண்டும் போட்டியிட்டு பெரும் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றேன். தமிழகத்தின் கிளைகள் வலுவாக்கப் பெற்றன. முறைப்படி சுற்றுப் பயணம் விரிவாகச் செய்தேன்.

1966 ஆம் ஆண்டில் வேலூரில் மாநில மாநாட்டில் பொதுச்செயலர் குப்தா பங்கு கொண்டார். பிரச்சினைகள் உருவாக்கப் பெற்றன. சங்க அமைப்புபடி விதிகள் திருத்தப் பெற்றன. எனவே மாநிலத் துணைத்தலைவராகப் போட்டியிட்டு மாபெரும் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றேன்.

1967 ஆம் ஆண்டு மார்ச் 6 ஆம் நாள் அறிஞர் அண்ணா அவர்கள் தமிழக முதல்வராகப் பொறுப்பேற்றார். அதேநாளில் (6-3-67) சேலம் மகளிர் மயப் போராட்டத்தை குப்தா அணி தொடங்கியது. என்றாலும் மாநிலத் துணைத் தலைவர் பொறுப்பை மறவாமல் போராட்ட ஆயத்தப் பணிகளைத் தொடர்ந்தேன். சுற்றுப்பயணம் விரிவாக நடந்தது. திருச்சி மகளிரின் தீரத்தால் போராட்டம் வெற்றி பெற்றது.

1968 செப்டம்பரில் அடையாள வேலை நிறுத்தம் இந்தியா எங்கணும் நடந்தது. தமிழகத்தில் சுற்றுப்பயணமும் போராட்ட ஆயத்தமும் விரிவாக நடைபெற்றன. காரைக்குடியில் நமது சித.சிதம்பரம் MLA அவர்கள் துணையில் போராட்டமும் ஒரு நாள் முழுதும் நடந்தது. போராட்டம் வெற்றி பெற்றது.

1969 ஆம் ஆண்டு திருச்சியில் இந்தி டெலிகாம் எதிர்ப்பு மாநாடு நிகழ்ந்தது. எனது பங்கு அதிகம் இருந்தது. எனவே அதன் தொடர்ச்சியாக தேவகோட்டை மடல் சுற்றறிக்கைகள் என்னால் வெளியிடப் பெற்றன. குப்தா அவர்களை எதிர்த்தேன். மோதல் தொடர்ந்தது. குப்தாவின் தொழிற்சங்க விரோதப் போக்கை தமிழகமெங்கும் கண்டித்தது.

1971 ஆம் ஆண்டு கோவையில் மாநில மாநாடு கூடியது. மீண்டும் மாநில அமைப்புச் செயலர் பதவியைக் குப்தா கொண்டு வந்தார். மாநில அமைப்புச் செயலராக பெரும் வாக்கு வித்தியாசத்தில் தேர்வு பெற்றேன். ஆனால் தமிழகத்தில் வலுவான 14 இடங்களில் ஜனநாயகப் படுகொலை குப்தா அணியின் சர்வாதிகாரத்தினால் நடந்தது. போராட்டப் பட்டியல் வெளியிடப் பெற்றது. அங்கீகாரமும் குப்தாவினால் வழங்கப் பெற்றது. இதை எதிர்த்து நீதி மன்றங்களில் வழக்கு நடந்தன. ஆனால் நீதிமன்றம் அமைப்பு விதியின்படி குப்தாவின் செல்வாக்கில் தலையிட முடியாது என்று தீர்ப்பு வழங்கி விட்டது. தமிழகம் முழுவதும் துயரம் நிகழ்ந்து. ஈரோடு நண்பர்களின் முடிவினால் தமிழகத்தில் பரபரப்பு நீடித்தது.

1972 ஆம் ஆண்டு மதுரை மாநில மாவட்டத்தினை தொழிற்சங்க ஜனநாயக அணியினர் புறக்கணித்தனர். தமிழகத்தில் தொழிற்சங்கப்பணி மறுஆய்வு செய்தோம். தில்லியில் பேரணி நடத்தினோம். மாற்று முயற்சிகள் நடந்தன.

1973 ஆம் ஆண்டு நாம் தொழிற்சங்க ஜனநாயகம் காக்க NFTFE விலகி FNPTO சங்கம் அமைக்க முடிவு செய்தோம். புதிய பாதை உருவாகியது.

1974 ஆம் ஆண்டு, தமிழகக் கிளைகளில் கருத்தரங்குகள் நிகழ்ந்தன. பெயர் மாற்றங்கள் நிகழ்ந்தன. பழனிக்கிளையில் காலையில் NFPTE மாநாடு மாலையில் அதே கிளை FNPTO வாக உருவாகியது.

1974 ஆம் ஆண்டு முதல் FNPTO தேசிய சங்கத்தின் மாநிலச் சங்க ஆலோசனை சிறப்பு அமைப்பாளன், தொண்டன், துணைவன்.

## பிற பணிகள்

1. காரைக்குடியில் இயங்கி வரும் மைய மின் வேதி ஆய்வகத்தில் (CECRI) தொழிற்சங்கம் அமைக்கப்பெற்றது. நான் ஆலோகருக்குத் தேர்வு பெற்றேன். அதில் வேலை உறுதி பெற்றுத்தர உறுப்பினர்களின் ஆலோசனையை ஏற்று 1974 ஆம் ஆண்டில் புதுதில்லி சென்றேன். 41 தற்காலிக ஊதிய நிரந்தரம் பெற்றனர்.

2. தனியார் தொழிற்சங்கத்தில் காரைக்குடி தங்க பஸ்பம் தொழிலாளர் சங்கத்தில், கௌரவ ஆலோசகராகத் தேர்வு பெற்றேன். நன்கு பணி ஆற்றினேன். 1980 ஆம் ஆண்டு முதல் 1988 ஆம் ஆண்டு வரை மூன்று தடவை ஊதிய உயர்வு ஒப்பந்தம் உருவாக்கி கூடுதல் DA பஞ்சப்படி ஓய்வூதியம், பணிக்கொடை முதலியன பெற்றுக் கொடுத்தேன். LABOUR TRIBUNALE அமைப்புகளில் பங்கு கொண்டு ஊழியருக்காக வாதாடி போனஸ் தொகை - சுமார் ஐந்து மாதச் சம்பளத்தை நிர்வாகம் கொடுக்க வைத்தேன். இதனால் புகையிலை தொழிலாளர்களின் பாராட்டைப் பெற்றேன்.

3. தமிழ்நாடு தொலைத் தொடர்புத் துறையின் சார்பாக, மாநில நிர்வாகத்தின் அமைப்பின் பேரில் சங்க மொழிபெயர்ப்புப் பணி ஆற்றினேன். துறையின் சார்பில் வெளியீடுகளைத் தமிழாக்கம் செய்யவும், தொகுக்கவும் செய்து, நிர்வாகத்தின் பாராட்டைப் பெற்றேன். அப்போது தொகுக்கப் பெற்ற நூல்கள்

1. மின் விபத்துக்கள் - ஒரு ஆய்வு
2. புறப்பொறி பேணுதல்
3. சிறிய தானியங்கி அகம்
4. விபத்திலிருந்து விடுதலை

4. தொலைபேசித்துறையின் வளர்ச்சி - விரிவாக்க பணிகளில் ஆர்வம். இயக்கங்களின் ஒருங்கிணைப்புப் பணிகள் - சாதனைகள் - துறைசார்ந்த வழக்குகளில் சட்ட ஒருங்கணைப்பாளராகப் பணியாற்றி புதுதில்லி சென்று தேசிய பணியாளர் குழுமம் (National Consumer Commission) டில்லி வழக்குகளில் வாதாடி வெற்றி பெற்றுத் திரும்பினேன்.

## பிற செய்திகள்

1975 ஆம் ஆண்டில் இலங்கைக்கு விமானத்தில் சென்று கப்பலில் திரும்பினேன். இலங்கை மலைப்பகுதியில் பூசலாவை நகரில் மக்களைச் சந்தித்து உரை நிகழ்த்தினேன். இந்தியக் கவிஞர் வருகை என இலங்கை ஏடுகளில் செய்தி வெளிவந்துள்ளது.

1985 ஆம் ஆண்டு அனைத்திந்திய அஞ்சல் தந்தித் தொலைபேசி அமைப்பு (PTTI) பயிற்சிக் கருத்தரங்கில் என் விரிவுரை அனைவரையும் கவர்ந்தது.

1986 முதல் 1992 வரை திருக்குறள் ஆய்வாளராக (வாரவாரம்) நிகழ்த்தினேன்.

1969 ஆம் ஆண்டு உலகத்தமிழ் மாநாட்டில் பங்கு கொண்டு அதன் சார்பாக நடந்த கவியரங்கில் தமிழ்க் கனவு என்ற தலைப்பில் கவிதை வழங்கினேன்.

1972 ஆம் ஆண்டு திருச்சி வானொலியில் கவிச்சொல் கேளீர் என்ற தலைப்பில் கவிதையாற்றினேன்.

## இலக்கியப் பணிகள்

பள்ளிப்பருவம் முதல் கவிதை பாடும் ஆர்வம். கல்லூரி வாழ்க்கையில் பல்கலைக் கழகக் கவிதைப் போட்டியில் பரிசு - மதுரை எழுத்தாளர் மன்றத்தினர் நடத்திய சிறுகதைப் போட்டியில் முதற்பரிசும் படைப்பாளர் என்ற பாராட்டும். திருக்குறள் அமைப்புகளின் தொண்டன். என்ற சிறப்பு. தமிழ் மாநிலத் திருக்குறள் பேரவைக் கவியரங்கில் பங்கு. அறிஞர் அண்ணாவால் பாராட்டு. பட்டிமன்றப் பேச்சாளன். செயற்குழு உறுப்பினர். தமிழ்ச்சான்றோர் அறிந்த பணியாளன். திருக்குறளை மாவட்டந்தோறும் பல்லாண்டுகளாகப் பரப்பி வரும் செயலன். 1993 ஆம் ஆண்டு முதல் இப்பணி நடைபெற்று வருகிறது.

## தைத்திங்கள் முதல்நாளே தமிழ் ஆண்டின் தொடக்கம்

(கவிஞர் நாவுக்கரசன்)

தைத்திங்கள் முதல்நாளே தமிழர் ஆண்டு
தாரணியில் பிறந்ததெனச் சட்ட மன்றில்
வைத்ததொரு சட்டத்தில், கலைஞர் கோமான்
வாகான தமிழ்ஆண்டின் தொடக்கம் சொன்னார்!
தைத்தையென தமிழரெல்லாம் முழக்கம் இட்டார்
தமிழ்ஆண்டின் தொடக்கமென மகிழ்ச்சி கொண்டார்!
பொய்த்தலைகள் புறஞ்சொன்ன போதும், மக்கள்
புத்தாண்டின் தொடக்கத்தை ஏற்றுக் கொண்டார்! (1)

தமிழாய்ந்த தமிழ்மகன்தான் தமிழர் நாட்டில்
தமிழ்உரிமை கொண்டதென வரவேற் கின்ற,
அமுதமொழி பாவேந்தர் அன்றே சொன்னார்!
அஞ்சுகத்தாய் அருமைமகன்! குவளை மைந்தன்,
தமிழ்நாட்டில் முதல்வரென, அரசுக் கட்டில்
தன்மானத் தமிழ்க்கலைஞர் ஆட்சி ஏற்றார்!
இமயமுதல் குமரிவரை இருக்கும் மாந்தர்,
எக்காளம் கொட்டியிங்கு வரவேற் கின்றார்! (2)

பிரபவமுதல் ஆறுபத்து ஆண்டு மீண்டும்
பிறக்குமெனச் சோதிடர்கள் சொல்லி வைத்தார்!
வரும்ஆண்டைக் குறிப்பதென்று எண்ணிப் பார்த்தால்
வரும்காலம்! ஏமாற்றம்! அதனால் தானே!
ஒருஆண்டு தமிழ் ஆண்டாய் மக்கள் ஏற்க
உலகத்தார் முதன்மைபெறச் செய்ய வேண்டி,
சரிஆண்டு தமிழ்ஆண்டு தொடங்கும் தையில்
தன்மானத் தமிழ்க்கலைஞர் சட்டம் தந்தார்! (3)

முன்னாளில் கல்வியில்லாக் காரணத் தால்
முதாதையர் சோதிடர்க்கே அடிமை ஆனார்!
அன்னாளில் நமதாண்டு என்றே சொல்ல
யாருக்கும் துணிவில்லை, துடிப்பும் இல்லை!
இந்நாளில் பழங்கணக்கை வைத்துக் கொண்டால்
எப்பொழுது சரியாகும், மாற்றம் வேண்டும்!
அண்ணாவின் தம்பியவர் கலைஞர் கோமான்
அழகாக வள்ளுவத்தின் கணக்கை ஏற்றார்! (4)

எத்தனையோ ஆண்டுகளில் எந்த ஆண்டு
எனக்கேட்டால், சரியான விடையே இல்லை!
முத்திரைபோல் கணினியுகம் வருகை செய்ய
தமிழரெல்லாம் கல்லூரிக் கல்வி பெற்றார்!
புத்துலகை விமானயுகம் உலகம் தன்னை
சுருக்குவதைப் புரிந்ததனால் ஏற்றம் பெற்றோம்!
வித்தகர்போல், வீற்றிருக்க, தமிழர் பாரில்
விளங்குவதைப் பூரிப்பால் உவகை பெற்றார்! (5)

பத்தொன்பது நூற்றாண்டு தொடங்கும் போதில்
பன்னூறு தமிழறிஞர் ஒருங்கே சேர்ந்து
ஏத்தரொரு தமிழ்ஆண்டின் கணக்கை ஆய்ந்து,
உவகையுடன் வள்ளுவனார் ஆண்டை ஏற்றார்!
வித்தாரத் தமிழ்ஆண்டின் அமைப்பைத் தந்தார்!
வள்ளுவனார் கணக்கதனால் ஆண்டு பெற்றார்!
வைத்தரொரு, கிறித்தாண்டு, வள்ளுவர் ஆண்டு
வையகத்தில் தொடரட்டும்! வணக்கம், ஏற்போம்! (6)

# என் தாய்

**மறைந்த தனது தாயார் மா. தெய்வானை ஆச்சி அவர்களின் நினைவாக மா. ஆண்டியப்பன் எழுதிய இரங்கல் பாடல்**

**அம்மா!**

ஒருகுற்றம் செய்யாத உன்மகனை விட்டுவிட்டு
பெருந்தவிப்பில் ஆழ்த்தியநீ வேகமாக மறைந்தாயோ?
பெரியம்மா பெற்றமகன் பெருந்துணையாய் எனக்கிருந்தார்
சரியில்லாக் காரணத்தால் சடுதியில் எனைத்துறந்தார்
பகையாய் அவையோர்கள் பண்பிழந்து மோதிவிட்டார்!
தகைமை சிறிதுமின்றி சங்கடத்தில் நான்ஆழ்ந்தேன்.
தங்கைபெற்ற மக்களைச் சற்றும் ஓய்வின்றி
எங்கெங்கு சென்றாலும் என்கூட நான் அழைத்தேன்!
கூழ்குடிக்கும் போதெல்லாம் கூடவொரு கைபோட்டு
ஏழ்மையைப் புறம்தள்ளி எப்படியோ வளர்த்துவந்தேன்.
வளர்ந்தவர்கள் என்னையே வம்புக்கு இழுக்கின்றார்!
தளர்ந்த ஒருநிலையாலும் என்சங்கடங்கள் பெருக்கிவிட்டார்
முத்தெடுக்க கடல்நீரில் மூழ்கி எழுந்தாலும்
முத்துமட்டும் வாராது! மணல்தான் வரும் என்றாய்.
ஆனாலும் அம்மாஉன் அன்புமுகம் பார்த்ததினால்
காணாமல் போனவர்கள் கைகழுவி விட்டுவிட்டேன்!
சோதனைகள் துயரங்கள் தோள்மீது தாங்குகிறேன்!
வாதனைகள் வாராதுநீ வழிகாட்ட வாழ்ந்திருந்தேன்!
சேர்ந்திருக்க எனைப்பார்த்து மகனே என் மகளே என
ஆர்த்தெழும்பி ஆளாக்கி அன்புடனே வளர்த்திட்டாய்!
எத்தனையோ ஆண்டுகளாய் என்மீது பாசமுடன்
முத்தாக எனைவளர்த்தாய் ஒருபோதும் கடிந்ததில்லை!
எனைக்காத்து வளர்த்திட்டாய்! இன்னுயிரை ஈந்திடுவாய்
உனையொன்று வேண்டினேன் உயரத்தில் சென்றாயோ!

....................



சிங்கப்பூரில் சிங்கச் சிலை



சிங்கப்பூர் - 'மாரியாட்' விருந்து மாளிகை



சென்டோசா - வான்கோபுரத்திலிருந்து சிங்கப்பூர்



சிங்கப்பூரில் பேரன் கௌதமனுடன்



'சென்டோசா' - வான் கோபுர வாசல்




'சென்டோசா' - வான்கோபுரம் சுற்றி வரும்போது



சிங்கப்பூர் - சிங்கச்சிலை - அருகே தோற்றம்

வெல்க தமிழ்

# பேரறிஞர் பெருந்தகை அண்ணா நூற்றாண்டு

## காரைக்குடி நாவுக்கரசன்

### அறிஞர் அண்ணாவின் இயக்கப்பற்று

*நூற்றாண்டு விழாக்கண்ட அறிஞர் அண்ணா*
*நிகரற்ற தன்மானக் கொள்கைத் தங்கம்*
*மாற்றாரை மதிக்கின்ற அறிஞர் அண்ணா*
*மறுப்புக்கும் மறுப்பெழுதிக் கழகம் காத்தார்!*
*வேற்றுமையில் ஒற்றுமையை அறிஞர் அண்ணா*
*வளர்த்திட்டார்! இயகத்தை வளர்த்தார்! வென்றார்!*
*தூற்றுவார் தூற்றட்டும்! தமிழர் நாட்டின்*
*திராவிடத்து முன்னேற்றக் கழகம் கண்டார்!* 1

### அறிஞர் அண்ணா நெஞ்சில் நின்ற காட்சி

*காரைநகர் பொதுக்கூட்டம்! அறிஞர் அண்ணா*
*கருத்துமழை பொழிந்திட்டார்!: ஐம்பத் தாறில்!*
*பேருக்குச் சொல்லாமல் நெஞ்சில் நின்ற*
*பெரியதொரு சொற்பொழிவு! உணர்ச்சி வெள்ளம்!*
*நேருக்கு நேராக யானும் சென்றேன்*
*நிகரில்லா அண்ணாவின் பேச்சுக் கேட்டேன்!*
*யாருக்கும் கிடைக்காத அரிய வாய்ப்பு!*
*என்நெஞ்சில் அண்ணாதான் நிறைந்து நின்றார்!* 2

## அறிஞர் அண்ணாவின் பேராவூரணிச் சொற்பொழிவு

பேரா வூரணி நகரில் அறிஞர் அண்ணா
பேசுகிறார் எனக் கேட்டு அங்கே சென்றேன்!
"நேர்சாரி" "இடது சாரி" வகைகள் சொன்னார்!
நிகரற்ற "வலது சாரி" என்றே அண்ணா,
பேருக்குச் "சாரிகளை" அடுக்கிச் சொன்னார்!
பெரும் பொழிவு அதிசயமாய் மக்கள் கேட்டார்
ஊர்ஊராய்த் திரண்டு வந்த மக்கள் கூட்டம்!
உண்மைகளை அடுக்கி வைத்தார் நானும் கேட்டேன். 3

## அறிஞர் அண்ணாவின் காரைக்குடி மாநாடு

மாம்பலமா சேனை தரும்? செட்டி நாட்டில்
போராளிக் கூட்டம் தான் வருவ துண்டா?
ஆம் என்றால் பொன்மலையில் பெரிய கூட்டம்
அழைப்புக்கு நிற்குமென அண்ணா சொன்னார்
தேமதுரச் சொற்பொழிவைக் காரைக் குடியில்
குறட்கழக மாநாட்டில் உரைகள் ஆற்றி
பூமிதனில் "பேரறிஞர்" என்றே அண்ணா
பொழிந்திட்டார்! நிறைசெய்தார்!ஃ யானும் கேட்டேன்! 4

## அறிஞர் அண்ணா தேவகோட்டைச் சொற்பொழிவு

*தென்னரசு சிறுகதைகள் மன்னன் என்ற*
*சிறப்புடையார் -மாவட்டச் செயலர் ஆனார்.*
*தன்னரிய பணிகளினால் இயக்கம் தன்னைத்*
*தனியிடத்தில் கொண்டிருந்தார் -அறிஞர் அண்ணா*
*தன்னையே கூட்டிவந்து தேவ கோட்டை*
*ஆற்றோரம் சொற்பொழிவு ஆற்ற வைத்தார்!*
*என்ன இது?அண்ணாவின் சொற்பொழிவால்*
*இயக்கத்தை ஆல்போல வளர்த்து வென்றார்!* 5

## அறிஞர் அண்ணாவின் சிராப்பள்ளி மாநாடு

*அண்ணாவின் தம்பியர் போல் அங்கை தங்கை*
*ஆயிரமாய்க் கழகத்தில் சேர்ந்தார்! காத்தார்!*
*பண்பாளர்! பாசத்தில் தாயைப் போன்ற*
*பத்மாவதி -சக்குபாய் மகளிர் தாமும்*
*அண்ணாவின் சிராப்பள்ளி பொதுக்கூட்டத்தில்*
*சேர்ந்திட்டார் உரைநிகழ்த்தி பங்கும் கொண்டார்*
*அண்ணாவின் தங்கையர்கள் பின்னாள் தன்னில்*
*இறுதிநாள் ஊர்வலத்தில் சென்னை சென்றார்.* 6

## "அவள் இல்லாக் கவிஞர்" - அண்ணா கூற்று

*"அறம்" பாட, ரவிக்கவிஞர் அழைத்தார் என்னை!*
*துறவறத்தை யான் பாட இல்லம் தன்னில்*
*அறம்காட்ட அவள்இல்லை- வருவாள் !உண்மை!*
*அதனாலே துறவறத்தைப் பாடவில்லை*
*'அறம்' பற்றிக் கவியரங்கம் அண்ணா கேட்டார்.*
*அதுபற்றித் தன்பேச்சில் குறிப்பிட்டார்கள்*
*அறிஞரண்ணா அவள்இல்லாக் கவிஞர் என்றே*
*அவ்வரங்கில் கூறியதை அவையோர் கேட்டார்!* 7

## "அவள் வந்தாள்" -துணைவின் பெருமை

*"அவள் இல்லாக் கவிஞர்" என அறிஞர் அண்ணா*
*ஆசையோடு அழைத்தார்கள் ஐம்பத்தெட்டில்!*
**'அவள் வந்தாள்'- எட்டைந்து அறுபதாம் நாள்**
*அன்றுமுதல் என் வாழ்வில் வசந்தம்! இன்பம்!*
*அவள் தந்தாள் வீடுமனை தோட்டம் பூமி,*
*ஐந்து பிள்ளை! பதினேழு ஆண்டு வாழ்ந்தாள்*
*அவள் மறைந்தாள்! என் இல்லம் நிறைந்து நிற்பாள்!*
*சுசீலை மகள்- என் மக்கள் இறையாய்க் காப்பாள்!* 8

## "மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கு மணம்"

மாற்றானின் தோட்டத்து மல்லிகைக்கும்
மணமுண்டு என்றார்கள்! ஒருமைப்பாட்டுக்
கூற்றான சொல்லுணர்வோம்! கொள்கை காப்போம்
கோபாட்டில் ஒன்றுபட்டே மாந்தர் தம்மின்
வேற்றான நெறி அறிந்து திருத்தம் செய்வோம்!
வேற்றுமையில் ஒற்றுமையை விரைந்தே, அண்ணா
போற்றுவண்ணம் நமதாக்கி, தமிழர் சேனை
வேறுபடா நிலை காப்போம்! வெல்வோம் வாழ்வோம்! 9

## அறிஞர் அண்ணா -உரிமையும், உறவும்

'உறவுக்குக் கைகொடுப்போம்' முன்னோர் சொன்ன
'உரிமைக்குக் குரல் கொடுப்போம்!'அறிஞர் அண்ணா
முறைப்படுத்திச் சொன்னார்கள்! என்றும் மாறா
முன்னேற்றக் கழகத்து மூச்சுக்காற்றாய்
திறமறிந்து சேர்ந்திடுவோம்! தேசப் பற்றில்
தினையளவு குன்றாது நாட்டைக் காப்போம்.
மரபு நெறி காத்திருப்போம்! தமிழன் வாழ்வு
மாறாது! உயர்ந்ததென , நிமிர்ந்து நிற்போம்! 10

## அந்தக் காலம்! தமிழ்ப்பேச்சுக் கேட்கப் பொருள்கொடுத்தார்

*மதுரை நகர் எழுத்தாளர் மன்றத் தார்கள்*
*மனவலிமை படைத்தவர்கள்! அதனால், அன்றோ,*
*விதித்தார்கள் கட்டணத்தை! காசும் வைத்தார்!*
*பேரறிஞர் அண்ணாவைப் பேசச் செய்தார்!*
*அதிசயமாய் அந்நாளில் தமிழைக் கேட்க*
*நுழைவாயில் கட்டணத்தைத் தந்தே மக்கள்*
*புதிதாகச் சொற்பொழிவைப் பருக வைத்தார்!*
*பொருள் கொடுத்துத் தமிழ்கேட்டல்! அந்தக் காலம்!* 11

## அறிஞர் அண்ணாவும் கவிஞர் கண்ணதாசனும்

*அக்காலம் ஐம்பத்து எட்டாம் ஆண்டு,*
*அரும்புலவர் -கவியரசர்-கண்ண தாசன்*
*பொற்காலம் எனத் தமது பேச்சில் சொன்னார்*
*பொங்குதமிழ் வைகை யாறு, தமிழின் ஊற்று!*
*அக்காலம், தமிழ்கேட்கப் படையாய்க் கூடும்!*
*ஆற்றல்மிகு சொற்பொழிஞர் கண்ணதாசன்*
*இக்காலம், அந்நாள்போல் இருக்கவில்லை!*
*இருந்தமிழே! உன் நிலைமை! இதுதான் உண்மை!* 12

## கலைஞரும் "கழித்தல்" கவியரங்கமும்

மறுபடியும் எனை அழைத்தார் கவிதை பாட
மாமதுரை எழுத்தாளர் மன்றத்தார்கள்!
அறுபதிலே மதுரையிலே மாநா டன்ன
எழுத்தாளர் மன்றத்தின் ஆண்டுக்கூட்டம்.
திறமாகக் கவியரங்கம் பாடச் சொன்னார்!
"பொருள்" தந்தார்! கழித்தலெனும் தலைப்பை ஏற்றேன்!
துருவதிலே திருநாளாம் அன்றைக்கூட்டம்
தமிழினத்தின் தலைமகனாம் கலைஞர் வந்தார்! 13

## அண்ணாவுக்குப் பின் -கலைஞர் வந்தார்

திருக்குறளில் இருநூறு பாக்கள் தேர்ந்தே,
பேருந்தில் எழுதிடவே கலைஞர் செய்தார்!
அருமையான கவிஞர் தன் பொழிவைக் கேட்டேன்
"அண்ணாவுக்குப்பின் வருவார் கலைஞர்" என்றேன்
பெருங்கலைஞர் திருமகனார் பேச்சு, பொன்னிப்
பேராற்றின் வெள்ளமெனத் தெளிந்தேன்! அன்றே!
திருக்குறளைக் கலைஞர்கோன், மதுரை மூதூர்
தெருவெங்கும் தமிழ்முழக்கம் செழிக்கச் செய்தார்! 14

## அண்ணா வழியில் கலைஞர் ஆட்சி

அறிஞரண்ணா பேச்சுக்கு அடுத்த பேச்சை
ஆற்றிடுவார் கலைஞர் என அறிந்துகொண்டேன்
திறமிக்க புலமை எனில் எவரும் ஏற்பார்
செந்தமிழ் போல் அண்ணா பின் கலைஞர் ஆட்சி!
அறிஞர் கோன் அண்ணாவுக்கு அடுத்த வந்த
ஆற்றல்மிகு கலைஞர் கோன் உணர்த்தி விட்டார்!:
அறிந்துகொண்டேன்! அறுபத்தெட்டில், தமிழ் நாட்டின்
ஆட்சியிலே முத்திரைகள் கலைஞர் செய்தார் 15

## அண்ணாவைத் தொடர்ந்து கலைஞர் ஆற்றல்

தமிழ்நாட்டில் தமிழாய்ந்த தமிழன் தானே
முதலமைச்சாய் வருவதென முடிவு செய்தோம்
அமிழ்தான இம்முடிவு! ஆட்சி மாற்றம்
அந்நாளில் அண்ணாபின் கலைஞர் ஆட்சி.
இமிழ்கடலின் முத்தைப்போல், தமிழர் நாட்டில்
ஏழாண்டு கழித்துப் பின் இதனைக் கண்டேன்
தமிழ்நாட்டில் தமிழாட்சி! அண்ணா ஆண்டார்!
தலைவர்பின் கலைஞர்கோன் ஆட்சி ஏற்றார்! 16




## அறிஞர் அண்ணாவின் தொண்டும் புகழும்

*அண்ணாதான் "தமிழ்நாட்டை" மீட்டுத்தந்தார்*
*அடுக்குமொழிச் சொல் நயத்தை பேச்சில் வைத்தார்!*
*அண்ணாதான் தமிழர்களின் உரிமை தந்தார்*
*ஆட்சியிலே சின்னாளில் அண்ணா செய்தார்!*
*அண்ணாதான் சுயமரியாதைத் திருமணத்தை*
*அகிலத்தில் முதன் முதலாய்ச் சட்டம் தந்தார்!*
*அண்ணாதான் சாதியிலாச் சமூகம் காத்தார்!*
*அவர் புகழைப் பரப்புவதே நமக்கு வேலை!* 17

## அறிஞர் அண்ணா- இறுதியாத்திரை

*நூற்றைம்ப துலெட்சம் மக்கள் நின்று*
*நேரடியாய் மறைமுகமாய் அழுதார் கூடி.*
*"நேற்றான" பேரறிஞர் அண்ணா செல்ல*
*கோடி மக்கள் அழுதார்கள்! அழுதேன் நானும்!*
*கூற்றுவனும் காத்திருந்தான்! அறிஞர் அண்ணா!*
*உடல் தின்றான்! என் செய்வேன்! அழுதேன் விம்மி!*
*நூற்றாண்டு விழாநாளில் அண்ணா நாமம்*
*நாடெங்கும் பரப்பிடுவோம்! வாழ்க அண்ணா!* 18

## கடமை, கண்ணியம், கட்டுப்பாடு

*கடமையுடன் கண்ணியமும் கட்டுப்பாடும்*
*காத்திடுவோம்! எனச்சொன்னார் அறிவு மேதை!*
*திடம்கொண்ட இளைஞர் படை ஒன்றாய்க் கூடி*
*திராவிடத்து முன்னேற்றக் கழகம் காப்போம்!*
*படம்காட்டும் கயவர் முகத் திரையைக் கிழிப்போம்*
*பார் புகழ முன்னேற்றக் கழகம் காப்போம்*
*நடமாடும் இயக்கமென கழகம் அண்ணா!*
*நமக்களித்தார்! எந்நாளும் வளர்ப்போம் காப்போம்!*

## முதல்வர் கலைஞரின் முத்தான ஆட்சி

*ஐந்து முறை ஆட்சி மன்றக் கட்டில் ஏறி*
*அருந்தொண்டு ஆற்றுகிறார், கலைஞர் கோமான்*
*ஐந்து முறை முதல்வரென ஆனார்! வென்றார்!*
*அரியணையில் தமிழன்னை! நமது ஆட்சி!*
*நைந்தாரின் நலம் பேணி வாழ்வும் தந்து,*
*நல்லாட்சி நடத்துகின்றார்!கலைஞர் செம்மல்!*
*பைந்தமிழ்த் தாய் அரசு எனக் கலைஞர் ஆட்சி!*
*பக்குவமாய் நடத்துகிறார்! வாழ்க! வெல்க!*

## ஆசிரியரை பற்றி...

முகம்நக நட்பது நட்பன்று; நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு

என்ற வள்ளுவப் பெருந்தகையின் குறளுக்கேற்ப மனம் மலர உள்ளன்போடு பழகும் பெருந்தகையாளர் பெரியவர் காரைக்குடி நாவுக்கரசன் அவர்கள்.

தேவகோட்டையில் அவர் தொலைபேசி இணைப்பகத்தில் பணிபுரிந்த காலந்தொட்டு எங்களது நட்பு தொடங்கி அன்றும், இன்றும் அன்றலர்ந்த மலர்போல் விளங்கி வருகிறது என்பது நிதர்சனம்.

சிறந்த கவிஞர், நாடக ஆசிரியர், சிறுவர் இலக்கியக் கர்த்தா, சிறந்த பேச்சாளர் என பலமுகங்களைக் கொண்டவர் நாவுக்கரசர்.

எனது மாணவப் பருவத்தில் அவருடன் பரிச்சயம் தேவகோட்டை பாரதி தமிழ்ச் சங்கம், தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் வாயிலாக கிடைத்தது.

கொள்கை அளவில் எவ்வளவோ கருத்து வேறுபாடு இருந்த போதிலும், அவருடைய தமிழ் உணர்வு, கலை உணர்வு என்னைக் கவர்ந்தது.

அவரது சிங்கப்பூரில் இருதிங்கள் பயணக் கட்டுரைகள் மூலம் பயணநூல் (Travelogue) எழுதுவதிலும் தன் தனி முத்திரையைப் பதித்துள்ளார்.

**வாழ்க அவர் தமிழ்த் தொண்டு!**

என்றென்றும் அன்புடன்...
**சேது சொக்கலிங்கம்**
அதிபர், கவிதா பப்ளிகேஷன்,
சென்னை-7

அச்சிட்டோர் : ஸ்ரீ கோபாலகிருஷ்ணா கம்ப்யூட்டர்ஸ் & ஆப்செட் பிரிண்டர்ஸ்,
தேவகோட்டை. போன் : 272713